அக்கர மப்பிரம மாமத்தி யாத்துமமாந்
தொக்க வசித்தின் றொடர்தன்மை—மிக்க
கருமமாங் கண்டதொழில் காரண மான
வருமங் குயிருணர்வார் மாட்டு. 3

அதிபூதம் பூத பரிணாம மாகு
மதிதெய்வந் தய்க்கு மவனே—யதியெச்ச
மாங்குயிருண் ணின்றே யாராத் தியலுமி
யோங்கிறையா னானென் றனர். 4

அந்தக்கா லத்திலு மாங்கென்னை யேநினைந்திங்
கிந்த வுடலினைவிட் டேகுமவன்—சிந்தைநிகழ்
என்றன்மை தானெய்து மீங்கிதனிற் சங்கைசேர்
தன்றன்மை யொன்றில்லை தான். 5

தானெந்த வெந்தப் பொருளுன்னித் தன்முடிவி
லூன்வந்த வாக்கை யொழித்தேகுந்—தானந்த
வந்தவது தன்னையே யாங்கனையு மெக்காலுஞ்
சிந்தையது செய்தலினாற் சேர்ந்து. 6

ஆதலா லெக்காலு மங்ஙனென்னை நின்றுநினை
நீதறுசீர் வெஞ்சமத்தைச் செய்குதிநீ—காதலா
வென்பான் மனம்புத்தி யேய்ந்தா னெனையடையுந்
தன்பாலோர் சங்கையறச் சார்ந்து. 7

செல்வழியி னின்பத்தச் செல்லாத நெஞ்சனாய்
நல்விரகா லென்னினைந்தா ரோடோறுந்—தொல்லையா
லென்றுமெனைக் கூடி யியோகிக்குப் பார்த்தனே
நன்று பெறவெளிய னான். 13

என்னை யடைந்ததற்பி னெஞ்சாத் துயர்வினைக்கு
பின்னை நிகர்பிறப்பு மேவாரார்—அன்ன
பெருமனத்த ராய்ப்பிறக்கும் பேரின்ப மன்னுந்
திருமனத்த ரானார் சிறந்து. 14

வேதா வுலகளவு மீண்டு வருமுலகென்
றோதாநின் றார்க ளுணர்வுடையோர்—போதார்ந்த
தாராருங் கௌந்தேயா வென்னடைந்தார் தாமீண்டு
வாரார் மறுபிறப்பின் வாய். 15

ஆயிர மேலுகங்க ளாங்கயனுக் கோர்பகலா
மாயிர மாமிரவு மற்றதுவென்—றோயும்
பகலிரவு தானறியும் பண்புடையா ரின்னே
நிகரறிவு தாஞ்செய்வர் நின்று. 16

தோன்று வயனுடம்பிற் றோன்றும் பொருளெல்லா
மென்றும் பகலி னிடையுதிக்கு—மான்றார்த்தங்
காகு மவையெல்லா மவ்வுருவன் னேயடங்கிப்
போகு மிரவாகும் போது. 17

அங்கிபகன் முற்பக்க மாங்கு வடவயனத்
தங்கிம்சை யேகியே தாமனைவர்—சங்கையற
மன்னும் பிரமத்தை வாய்ந்ததனைத் தம்முணர்வா
லுன்னு மனத்தவர்க ளுற்று. 23

தூமமிராப் பிற்பக்கஞ் சோராமற் றென்னயன
மாமதன்மேற் சந்திரனை யாங்கணைந்து—போமவன்று
னல்வினையிற் சேர்பயனு நாடணைந்து மீளுமே
மல்வினையிற் சார்பால் மறித்து. 24

வெளிதகரி தாயிருமை மேவியுல கேய்ந்த
வளியநெறி யாகைவற்றி லொன்றாற்—றெளிவமரு
மீளாப் பதமனையு மிக்கதனுன் மீண்டெருங்
கோளாறு தானனையுங் கூர்ந்து. 25

இவ்வழிக டானறிந்த யோகியவன் பார்த்தனே
யெவ்வழிப் மோகத் திடையனையா—னவ்வழியாற்
கால மனைத்திலுங் காதலால் யோகத்தை
யேல முயல்கண்டா யிங்கு. 26

வேதத்தில் வேள்வியினின் மெய்த்தவத்திற் றானத்தி
லோதப் பயனதனை யுற்றொழிந்து—மீதுபோய்
இந்த வறிவமரும் யோகிதான் மேன்முதலா
மந்த நிலமடையு மங்கு. 27

# அத்யாயம் 9.

## ராஜவித்யா ராஜகுஹ்யயோகம்.

உன்னைப் பரம்பரம னென்சீர் மருவுபர்த்தி
மன்னப் பவிக்ஞான வாசிதான்—றன்மையர்ந்து
நின்றியலும் பத்தி நிகழ்ந்துரைத்த கற்றிதை
பொன்றியசீ ரொன்பதா மோத்து.

இந்த மறைப்பொருளை யென்பாற் பொறாமையிலாச்
சிந்தை நிகழுனக்குச் செப்புகே—னெந்த
வறிவை யறிவதைசேர்ந் தவ்வறிவு தப்பாச்
செறிவில் வினைவிடுதி நீர்த்து. 1

இதிராச வித்தை யிதிராச குய்ய
மிதியாம் பவித்திர மிதாகு—மெதிர்கா ணு
மாட்சிதருந் தன்மத்து மன்னுஞ் சகத்தியலு
மேட்சிதரும் வியா திது. 2

என்றன் பிரகிருதி யேய்ந்தா னிவ்வெற்றை
முன்றன்மை யார்பின்று மூண்டளிப்பன்-றன்றன்மை
சேர்வசமொன் றன்றிச் செறர்ந்த வசத்திலவை
யார்வதையே பூதமுமன் காம். 8

அர்தக் கருமங்க ளாங்கவெற்றிற் றெத்தற்ற
சர்தத் தெனை மூயலான் றன்படிபோ—லிர்தப்
பெருர்தகைமை யாவிருக்கும் பெற்றியில ரூக்கு
வருர்தவிறை யும்பிணியா வாய்ர்து. 9

என்னேக்கம் பெற்றங் கசித்தச் சாரசரத்தை
மூன்னேக்கி நின்ற மூயன்றபெற—மின்னேக்கா
மேதவிறைற் கௌக்தேயா வெவ்வுலகுர் தன்கரும
மீது வளர்தருமே மிக்கு. 10

எத்தவுல குக்கு மிறையாகு மென்பெருமை
சத்தமதி னின்றுணர்வு சாராதார்—மத்தராய்
மானிடமா மிவ்வுடலில் வந்துதித்த தென்னையது
தானிடமா யின்றிகழ்வர் தாம். 11

பழுதான வாசை பழுதான கன்மம்
பழுதான ஞானம் படைத்தார்—பழுதான
நெஞ்சினராய் மோகமுறு கோரசா ராக்கதமாம்
வஞ்சத் தகப்பவேர் வந்து. 12

பற்றாய்ப்பரிப்பவனாய்ப்பார்க்கிறையாய்ப்பார்ப்பவனாய்
மற்றாக் கிருப்பிடமாய் வன்சாறாய்—உற்றாய்
தோற்றமுடி வுக்கிடமாய்ச் சூழ்நிதியாய் வீயாத
வேற்றமுடை வித்தாவேன் யான். 18

தாவமது செய்வேனான் பார்த்தா தடுத்துமழை
மேவவது தன்னை விடுவேனான்—சாவவிடாத்
தெள்ளமுது நானே செறுங்கூற் றமுநானே
யுள்ளதில தானதுநா னுற்று. 19

இந்தவென்னை வேதத் தியல்கின்ற வேச்சத்தால்
வந்திறைஞ்சித் தம்வினைபோய் வானிரப்ப—ர்தவர்
சென்றமரர் நாடணைந்து தேவர்தம் போகத்தை
நின்றயர்ந்து துய்ப்பார் திகழ்ந்து. 20

பொன்னகரில் வாழ்வெய்திப் புண்ணியத்தின் றன்குறை
பன்னினவரிவ்வுலகிற்பாடழிந்தே-பின்னடைவர்[யைப்
சாக்குமறைத் தன்மைக் கதியடைந்தார் காமத்தாற்
போக்குவரத் தேபெறுவர் பூண்டு. 21

வேறின்றி யென்னையவர் யெய்ந்நினைந்து சேவிப்பார்
பேறொன்றி யென்றும் பிரியாதே—தேறமவர்
தம்பேறும் யோக மிதுபிரியாச் சேமநான்
வன்பேறச் செய்வன் மகிழ்ந்து. 22

இத்தத் துறவுசேர் யோகத்தை யெய்தியசீ
ரொத்தைச் சுபாசுபமாய் மூன்வினையின்—பந்த
மறப்பெறுதி யாதலினு லாக்குவீ டெய்தி
புறப்பெறுதி யென்னை புகர்ந்து.　　28

யாவர்க்கு மொப்பனு னென்றனக்கி யாரிடத்து
மேவுகெறுப் போருகப்பு மிக்கில்லை—யாவரெனை
பண்பதனு லேயடைவா ராங்கவரென் பாலவர்பா
லின்பதனு லேயிருப்பன் யான்.　　29

மிகவுந் துராசாரமேவிநூம்வே றன்றைத்
துகவின்றி யென்றன்னைச் சார்வா—னிசழ்வின்றி
நாலறிவ னென்றே மதிக்கப் படுமவன்றான்
மேலறிவின் றன்மையான் மிக்கு.　　30

நல்லை யவன்றருமத் துற்ற வொருவனு
மல்லவினைச் சாந்திதனை மன்னுமே-யெல்லையில்சேர்
கெளந்தேயா வாங்கிதனைக் கட்டறிவீ யென்பத்தன்
போக்தே கசியான் புறத்து.　　31

ஈாத்தவெனைப் பற்றினும் பாவம் பயில்பிறவிச்
சேர்த்தபெண் வைச்சியருஞ் சூத்திரரும்—பேர்த்து
வினையடையார் வீடெய்தி மேற்கதியா மின்பச்
சினையடைவர் சென்று தழைத்து.　　32

## அத்யாயம் 10.

# விபூதியோகம்.

*அன்ன நிலைமை யெனத்தரா னுய்கின்ற*
*வண்ணம் விரித்துரைத்த வண்மையினத்—தென்னையாக்*
*கன்புறவே போக வுருக்கேனை பத்தர்போத*
*நின்புறவே போத வெலித்து.*

முன்னமுகக் தென்னே முகஞ்செய்த கேட்டவனக்
கின்னமுமென் மேன்மை யியம்புவன்கேள்—உன்னதிதம்
வேண்டியுரைசெய்யுமென்றன் மிக்கவுரை வெல்புயத்தா
மீண்டியன்ற சேண்மையவற் றிக்கு. 1

எய்த்தென் பெருமை யிமையோ ரெழின்முனிவ
ராய்ந்தன் னிறையு மவரறியார்—வாய்ந்தியலுஞ்
சாதிசேர் பூதங்க ளுக்குந் தவத்தோர்க்கு
மாதிநான் யார்க்கு மமைந்து. 2

*எதற்குந் தோற்றமா னென்னு ளடப்படுமென்*
*றிதை யறிந்தே யெனையடைவர்—மீதுற்ற*
*ஞானியரா யென்பா லலஞ்சேர் மனத்துடனே*
*தானியல்ல ரானவர்க டாம்.* 8

*என்னிலைய சிந்தையா ரென்பா லுயிரினர்*
*தன்னிலையிற் றம்மிற்றஞ் சார்வுணர்த்திப்—பின்னிய*
*சொல்லியெனை யென்றுஞ் சுகிப்பர் மிகவுகப்பர் [லாற்*
*எல்லிபக லொன்றின்றி யேய்ந்து.* 9

*என்றுமெனைக் கூடி யியல்வினையா ரென்றுகந்து*
*நின்றுமிகச் சேவித்து சேர்பவோர்க்—கொன்றியசீர்ப்*
*பத்தியோ கத்திற் பயின்றே யெனையடையும்*
*புத்தியோ கங்கொடுப்பன் பூண்டு.* 10

*ஆங்கவர்க்கே சால வனுகம்பை மேவியே*
*யோங்கியவர் ஞான வொளிவிளக்காற்—பாங்காக*
*நெஞ்சகத்தே நின்றுநா னேரே மதிமயக்கும்*
*வஞ்சவிருண் மாய்ப்பன் மகிழ்ந்து.* 11

*மாய னிசைத்த வளர்பெருமை கேட்டதின்னே*
*யாய விசைய னதுவிரும்பி—யேயவன்பான்*
*மிக்க பெருமை விரித்தறிய வேண்டியே*
*தக்க பரிசுரைத்தான் றான்.* 12

எவ்வாறு யோகமெனக் குன்னை நினைத்தறிவேன்
தவ்வாறு சானறிவ ஞறியா —யிவ்வாறு
மெய்ம்மையயா சற்பொருளி லெக்குணமு மிக்கவுனைச்
செவ்வழியாற் சிந்திப்பன் சேர்ந்து. 18

உன்னுடைய யோகத் தியல்வும் விபூதிபேதம்
பண்ணிவிரித் தீசா பகரினன் —றின்னியலுஞ்
சீரமுத மென்னஞ்செவியாற் பருகுமெனக்
காரவிர தில்லை யமைந்து. 19

இன்னே விசய னியம்ப விறையுரைத்தான்
மன்னே யுனக்கு மகிழ்ந்துரைக்கே —னென்னேர்
பரப்பிற்கோ ரெல்லையிலை பாரிவி பூதி
சிறப்பிற் றாந்தனைகே ணீ. 20

எப்பொருட்கு முன்னே யிருக்கின்ற வின்னுயிரா
னப்பொருளுக் காதிநடு வந்தமுமா —னிப்படியி
லெவ்வாறு மானுயியன்ற பரிசிதனைச்
சொல்லாக் கேளாய் தொகுத்து. 21

ஆதித்தர் தம்மி லதிகனும் விட்டுணோன்
சோதிப் பகலிரவிச் சோதியோன் —மீது
மருத்தவரின் மன்னு மரீசியோ னுனே
திருத்தமதி தாரகையிற் சேர்ந்து. 22

என்னைப் பரிக ளிவற்றி லமுதுதித்த
முன்னைப் பரியாக முற்றுணர்நீ—யன்னவகை
யைரா வதமா வணிகளிற்றுக் காங்குநரர்க்
கோரர் நராதிபனு மென். 28

வல்லா யுதங்களில் வச்சிரநான் வன்கோவி
லெவ்வாங் காக்கு வெழிற்கோனான்—சொல்லரு
முற்பத்திக் கர்த்தற் பனுநா னுயர்காமச்
சற்பத்தில் வாசுகிநான் முன். 29

பன்முகத்து நாகத்துப் பன்பா ளனந்தனுன்
றென்முகத்துக் கோவருணன் றேயத்தார்க்—கின்மு
வான பிதுக்கட் கரியமா நண்டிப்பார்க் [கத்தி
கூன மறயமனு முற்று. 30

தைத்தியரிற் பொன்னன் புதல்வனுன் றன்னியத்திற்
கோத்தியலுங் காலனுங் கூற்றவனுன்—பார்த்தியனுன்
சிங்கநான் சேர மிருகத்திற் செம்பறவைக்
கங்கருடன் றனுநா னங்கு. 31

தூய்மை தம்மி லுயர்பவனை றென்படை
சீடையார் தம்மி லிராமன்று—மீனோர்
வண்புனலின் றம்பின் மகரநான் யாறுகளில்
நன்புனல்சேர் சான்னவியு நான். 32

மன்னியசீர் யாத வரின்கண் தேவனும்
பன்னியசீர்ப் பாண்டவரின் விசயநான்—தன்னிகரில்
முன்னும் வியாதன் முனிவரினும் முக்கவிகட்
குன்னு கவியுசனு முற்ற 38

தாக்ஷிமை செய்வாரைத் தண்டிப்பார் தண்டநான்
வேந்தமர்வெல் வார்கட்கு நீதிநா—னுய்ந்தமைந்த
மௌனநான் றானே மறைப்பவற்றில் ஞானியர்த
ஞானநான் றானே நயந்து. 39

எல்லாப் பொருளுக்கும் யாதுமுதல் வித்தாகு
மல்லாருந் தோன்றிசையா மற்றதுநா—னல்லாது
மீங்கிதுகே ளென்னை யொழிந்திச் சாசரத்தி
லாங்குளதொன் றில்லை யது. 40

எற்குமென் றிவ்வியவி பூதிகளுக் கெல்லைதான்
பார்க்குமள வில்லை பார்த்தபனே—சேர்க்கவை
யுத்தேசத் துன்னி யுரைத்தேன் விபூதியிது
மெய்த்தேசற் றேய்ந்த விரிவு. 41

எது விபூதியுடைத் தேது திருவுடைய
தேது மிகவுயர்த்தி யேதுபொரு—ளேததுதான்
என்னுடைய தேசதனி லேகமைந்த சத்துளதா
வுன்னுடைய நெஞ்சா லுணர். 42

# அத்யாயம் 11.

## விசுவரூபதர்சனம்.

*பார்த்தனுக்கு மாயனருள் கீதைப் பதினொன்று*
*மோத்தில் உலகெல்லா முடம்பதனிற்—சேர்த்தபடி*
*காட்டுமது நன்னறிவு கண்டடைந்த நன்பத்தி*
*கூட்டுமதற்கு சொல்லும் குறித்த.*

மாயன் பெருமை வகைகேட் டகமகிழ்ந்து
தூய விசயனித் தொல்லுலக—மேயவகை
காணவிருப் புற்ற கருத்தா லவனெஞ்சம்
பூணவுரை செய்தான் புகழ்ந்து. 1

என்பா லிரக்கத்தா லீரு மறைப்பொருளா
நின்பா லறிவமர வீயுரைத்த—வின்பாருஞ்
சொல்லாலென் மோகத் துயக்கியுட னில்லாதே
யெல்லாங் கழிந்ததெனக்கு. 2

இங்கே குடாகேசா வென்னுடம்பி னோரிடத்தி
லங்கோர் சராசரங்க ளாகத்துந்—தங்குநெறி
தேறியே யெல்லாத் தெரியக்கா ணென்காண்பான்
வேறுதா னிச்சித்தாய் மிக்கு. 8

உன்னுடையவிக்கண்ணாலொன்றுமெனைக்காண்பரிதா
மென்னுமது தன்னாலே யானுனக்கு—மன்னியசீர்த்
திவ்வியமாங் கண்டருகேன் சீர்பிறங்கு மென்பெருமை
செவ்வியுறக் காணுதனுற் சேர்ந்து. 9

இவ்வகை சொல்லி யிறையான யோகேச
னவ்வகையாற் பார்த்த னவன்காண—மெய்வகையா
லீசமெனு மவ்வடிவை யாக்கனைத்துங் காட்டினான்
நேசமரு மேன்மை சிறந்து. 10

பலபலவாங் கண்முகங்கள் பண்பார் வியப்பும்
பலபலவாம் பார்க்கும் பரிசு— பலபலவாம்
பூண்சிறந்த வான்கலன்கள் போற்றிப் பலபலவா
மாண்சிறந்த வாயுதங்கண் மற்று. 11

மாலை பரியட்ட மன்னுமவை திவ்வியமாய்க்
கோலநறும் பூச்சதின் கோளுடைத்தாய்—மேலான
வாச்சரிய மெல்லா மமர்ந்தே யனந்தமா
யோச்சமிகு மெம்முகமு முற்று. 12

மிக்கவொளி ராசியாய் மீதெங்குந் தேசமர்ந்த
பக்கமுறக் காண்பரிதாய்ப் பார்ப்பனுன்—றெக்கணை
லற்கனொளி மிக்கனவற் றங்குமுடி சேயிகளை
பொற்கமற மேவுமுனை யுற்று. 18

ஆய்வறிவு சேர்பரமா மக்கரநீ யாக்கணைத்துஞ்
சாய்வறவே மேலாய்த் தரிப்பவன்நீ—வீய்வறவே
நிற்பவைநீ நிற்குமறங் காப்பானீ நித்தனு
நற்புருட னீயறிவ னுன். 19

ஆதிநடு வந்தமிலா னக்கனந்த வீரியனும்
மீதிதனிற் றேனனந்த மேவியகன்—சோதிமதி
நீமுகமா யெல்லாமுன் றேசாற் றபிப்பிக்க
யாமுகமாய்க் காண்பனுனை யாங்கு. 20

ஒக்குவிசும் பொண்புவியி னுள்ளிதவு மெத்திசையு
மாங்குயர்வாய் நின்றொருவ னுனிறைந்த-பாங்குடனே
யற்புதமாய் நின்கொடிதா யாருருக்கண் டெவ்வுலகு
நிற்பதிலை தானடுக்கு கின்று. 21

இந்தச் சுரகணங்க ளெய்திநிநெ மீங்குன்னைச்
சிந்தைப் பயத்தாற் சிலர்தொழுது—வந்துரைப்பர்
நன்முனிவர் சித்தரெல்லா நன்றுக வென்றுரைத்து
முன்னைவரத் தாற்றுதிப்பர் மூண்டு. 22

ஆங்கவர்க ளுன்ற னதிபயமாம் வவ்வெயிற்
றோங்கு முகங்களிடை யுற்றவிரைக்—நீங்கடைவர்
சின்னெனத்தாற் பல்லிடையி னின்றசிலர் பல்பொடியா
மன்சிரத்தாற் றோன்றவர்கண் மற்று. 28

ஆற்றின் புனல்வேக மாழியிடை நோக்கிப்போ
யூற்றத் தடையுமா றொக்குமே—சீற்றத்தத்
தீயமரு நின்முகங்கள் சென்றுலக வீரரெல்லாம்
போயடையு மாறு புகுந்து. 29

ஓங்கி யெரிமுகத்தி லோடியே விட்டிலெல்லா
மாங்கு விழுமா றதுபோல—வீங்குலக
முன்முகங்க டன்னிடையி னுற்றே விழுக்கண்டாய்
தன்முகஞ்செய் நாசத்தைச் சார்ந்து. 30

ஓங்கு மெரிமுகங்க ளாலே யுலகனைத்தும்
வாங்கி விழுங்கிப்பின் வாய்நக்கு—மாங்குனது
பேரொளிதத் தேசாற் பெருகத் தபிப்பிக்கும்
பாருக மெங்கும் பரந்து. 31

இக்கொடிய ரூபா வெவனீ யெனக்கியம்பாய்
தக்குனக்கு நான்பணிந்தேன் றன்னளிசெய்-மிக்கமுத
லானவுனை யிச்சிப்ப னுய்த்தறியேன் றேவவா
நானறியே னுன்செய்தி நன்கு. 32

எத்தாலே நின்வணங்கா ரிங்கவர்கண் மாலவனே
யத்தா பெரியோ பயன்றனக்கும்—வித்தே
யனவிறே வேசநீ யாங்குலகில் வைப்பே
யுனதிலதவ் வக்கரமே யூற்று. 38

தங்கமுதற் றேவனீ தொல்புருட னிவ்வுலகுக்
கங்கனிதி நீயறிவோ னவ்வறிவிற்—றங்குபொருண்
மேலுயருந் தாமமுநீ மிக்கனந்த ரூபாநின்
பாலுலகி னின்றேய் பரந்து. 39

வாயுநம னக்கி வருணன் சசாங்கன்றான்
ஆயுமுல காக்குவோ னங்கவனுக்—கேயுமுத
லானவனுக் காநம வாயிரங்காற் பின்பின்னு
நானமவுன் மேன்மே னலம். 40

முன்னே நமப்பிறகு மொய்த்தே நமவுனக்கிங்
கென்னோஞ் சூழ்ந்தநம வெல்லாமா—முன்னேதான்
வீயாத வீரியஞ்சேர் விக்கிரம மிக்கெல்லா
மீயாத வாவெல்லா நீ. 41

உன்பெருமை தன்னை யுணராதே தோழனென்
முன்பயிலு நெஞ்சான் முயன்றனா—னன்பதனு
லேகண்ணே வேதோழா வேயாத வாவென்பன்
மோகந்தன் னாலே முனிந்து. 42

ஈதுரைக்கப்பார்த்தனிறையுரைத்தானென்றுகப்பான்
மீதுனக்குக் காட்டினேன் மேலுருவம்—நீதிவொளி
சேரனந்த மாதியாஞ் சீருருவை நின்றொழிந்தா
ராரிதனைக் காண்பா ரமர்ந்து. 48

ஓதுமறை வேள்வி யுரைதான மோர்கிரியை
மீதுதவந் தன்னுன் மிகவென்னைப்—பூதலத்து
நின்னவரில் இவ்வாறு நேர்காண மாட்டார்காண்
மன்னகுரு வீரனே மற்று. 49

என்கொடிய ரூப மிதுகண் டெனக்கலக்கா
தன்கொடிய துன்ப மொழிந்திடுதீ—என்னுடைய
நெஞ்சாற் பயந்தீர்ந்து நேர்ந்த வென்வடிவை
யெஞ்சாது காணு யினி. 50

இன்னே யிறைவ னியம்பி விசயனுக்குத்
தன்னே ருருமீண்டு தான்காட்டி—முன்னேநின்
றுற்றியவ னச்சங் கெடுத்தா னழகினுந்
தேற்றியெழின் மேனியுடன் சேர்ந்து. 51

தானிறையைப் பார்த்தன் றகவுரைத்தான் மாயனே
மானிடமா நின்னழகார் மாமேனி—யானெனது
கண்ணைக் கண்டு களிக்கமர்ந்தேன் றன்மையினிற்

# அத்யாயம் 12.

## பக்தியோகம்.

*பத்தி யறிவாற் கடக்கும் பவலையை*
*மத்தி நுகப்பி னதிசயமு—முத்திதரும்*
*பண்பி னருட்கீதை பன்னிரண்டா மோத்துரைக்கு*
*இன்பமிகுஞ் சொல்லாற் றெரிந்து.*

என்றுமுனைக் கூடரினைக் இவ்வாறு பத்தராய்
நின்றுமிகச் சேவிப்பார் சேர்நன்மை—யென்றுயிர்
தன்னடைவார் தம்மிலெவர் தானதிக யோகியரென்
றன்னவுரைத் தான்விசய னுற்று. 1

அண்ண லுரைசெய்தா னவனுக்கென் பானெஞ்சைத்
திண்ணமிகச் சேர்த்துச் சிரத்தைமிகுத்—தெண்ணைத்தா
னுற்றென்று மென்னை யுபாசிப்பார் யோகியராய்
மற்றெற் கதிகரவர் வாய்ந்து. 2

சொல்லரிதாய் நண்ணியதா யெங்குந் தொடர்புடைத்
யல்லவைபோற் சிந்திப் பரிதாகிப்—பலவற்றுக் [தா
கோத்துச் சலியா துறுதியுறு மக்கரத்தில்
வைத்துப் பயில்வார் மனம். 3

வன்புலன்கள் செற்றெங்கும் வாய்ந்தசம புத்தியரா
யின்புறகன் கெப்பொருட்கு மேலுமவ—ரன்புடனே
யென்னுமெ னின்னுயிரி னின்பமே யெய்துவர்கள்
மன்னுகே ளிங்கருமை மற்று. 4

ஆங்கவர்க்கு நட்பஞ்சே ரவ்வுயிரிற் சித்தத்தா
லோங்க வருள்வருத்த முற்றுமிகும்—பாங்கதனிற்
றேன்று வுயிர்க்கதிதான் றக்க மிகுத்துடலி
லேன்றுருக் கெய்தலரி திங்கு. 5

ஏவர் தொழிலனைத்து மென்னிடைவைத் தேற்பாராய்
மேவி யனன்னியமா மெய்யோகச்—சேவையினு
லென்றுந் தியானித் தியன்றே ரெனைமருவி
நின்றிங் குபாசிப்பார் நேர்ந்து. 6

அன்புடனென் பாலே யமர்ந்தமனத் தாரவரைத்
துன்புயரு மிப்பவமாஞ் சூழ்கடலின்—றின்புடனே
வென்றியமர் பார்த்தனே மேலா லெடுப்பன்கா
ணன்றியன்று தாழாது நான். 7

என்னிடையே நெஞ்சையமர்ந் தென்பாற் றுணிவினை
பின்னிதன் மேற் சங்கையில்லை பீடுடனே-மன்னியமர்ந்
தென்பாலே யென்று மினிதா யிருப்புதிநீ
யன்பாலே சொன்னே னமர்ந்து. 8

உன்னெஞ்சை யென்பானீ யுற்றிருத்த மாட்டாயேற்
பின்னன்பி னிற்பயிலும் பெற்றிமைசேர்-நன்னெஞ்சுற்
றென்னை யடைந்தமர்வா னிச்சியாய் நிச்சயித்து
மன்னு தனஞ்சயனே மற்று. 9

வாய்ந்து பயிலவுநீ மாட்டாயே லென்னுடைய
வேய்ந்த தொழிலி னியல்வுறுதி—வாய்ந்தெனது
செய்யதொழின் மேவிச் சிறந்தியலுஞ் சிந்தையடைந்
துய்யுநலந் தான்பெறுதி யுற்று. 10

என்பத்தி யோகத் திணைந்தித் தொழில்செய்ய
வுன்பக்கல் சத்தி யுளதன்றேன்—முன்புற்ற
வெல்லாக் கருமத் தியல்பய னிங்கொழிந்து
செல்லாய் மனமடக்கித் தேர்ந்து. 11

ஞான மனப்பயில்வி னன்றுமிக ஞானத்தி
லான தியான மதிசயிதந்—தியானத்திற்
கன்மபயன் விட்டியல்வு கட்டழகு விட்டியல்விற்
றன்னமருஞ் சாந்தி தலை. 12

மற்றோ ரிடத்து மறமற்று மித்திரனா
யுற்றான் கருணை யுறுமமதை—செற்றா
னகங்கார மற்றா னமர்பொறையன் றுக்கஞ்
சுகங்காணி லொப்பான் றணிந்து. 13

பெற்றதமைக் தென்றும் பிறங்குயிர்க்கண் யோகியா
யுற்றமன முன்னொடுக்கி யோர்ந்துதெளிந்-தற்றமற
வென்னமர்ந்த நெஞ்சுதுணி வெய்தியான்றா னென்ப
றன்னமர்ந்து நானுகப்பன் றான். [த்தன்

யாவனு லஞ்சா துலகுலகா லஞ்சாதா
னேவனுகப் பாருமை யேய்ந்தபய—மேவுநடுக்
காங்கவைதாம் விட்டே யமர்வுற் றியல்பவனு
மீங்குகப்புக் கேய்ந்தா னெனக்கு. 15

வேண்டுதலி லான்றூயான் றக்கன் விருப்புறா
னீண்டுபகைப் பற்றிருப்பா னெத்தொழிலு—மூண்டுபு
தேதியலா தேங்கழும் யோகத்தா னென்பத்தி [றத்
யாதியல்வா னென்னுகப்பி லான். 16

உகப்புவெறுப் பொன்றிலுமற் றுட்சோக மற்று
மிகப்பயிலு மாசை விடுத்துச்—சகத்தமரு
நன்மையுடன் றீமை நசித்தியலும் பத்திமா
னென்மனத்தி லின்பத்தா னிங்கு. 17

ஒன்னலர்க ளூற்றார் விருப்பிழவோ டேற்றகுவிர்
பன்னழ லின்பதுன்பம் பாவுழி—மன்னுபுகழ்க்
கொத்தமைந்து மௌனியா யூர்மனையற் றற்றுணர்ந்த
பத்தனவ னென்னுகப்பின் பற்று. 18

எவரித் தன்மியா மின்னமுத யோகத்தை
மேவி யுரைத்தவகை மேவுவா—ராவலுட
னெற்பரம ராகு மெழிற்பத்தர் யானுகப்ப
நிற்பரவர் மேலாய் நிகழ்ந்து. 19

வாய்ந்தவான் கீதை வளர்பன் னிரண்டாமோத்
தேய்ந்தநெறி பத்தி பியல்காட்டும்—வாய்ந்ததனிற்
சத்திபில்லார் தாமுபலச் சாருகற் பத்திவருஞ்
சித்த முயற்றிபதஞ் சேர்ந்த.

பத்திவகை யாங்கறிந்து சேரப் பரன்பெருமை
யேத்தியலு மாய்நித் ததுவடிவ்—லோத்தியலக்
காட்டியது பத்திநலங் கண்ணன் றருகீதை
யாட்டிடையா ரேத்தின் வகை.

# பகவத்கீதைவெண்பா.

## குறிப்புரை.

### அத்யாயம்—7.

### விஜ்ஞானயோகம்.

முதல் ஆறு அத்யாயங்களால், ஸ்ரீமந்நாராயணனைக் கிட்டுகைக்கு உபாயம், அவனை யுபாஸிப்பதுதானென்று, அதற்கு ஆத்மஞானத்தோடுகூடிக் கர்மத்தைச் செய்து பெறவேண்டிய ஜீவாத்மதரிசனம் அங்கமாயிருக்கையால், அதையருளிச்செய்தார். நடுவிலுள்ள இந்த ஆறு அத்யாயங்களால் பரப்பிரம்மமான பரமபுருஷ ஸ்வரூபத்தையும், அவனை உபாஸிப்பதான பக்தியையும் அருளிச் செய்கிறார். அதில் இந்த எழாவது அத்யாயத்தில் (உபாஸ்யனான) பரமபுருஷ ஸ்வரூபத்தின் உண்

மையும், அது பிரகிருதியால் மறைக்கப்பட்டிருக்குந் தன்மையும், அம்மறைவு நீங்குகைக்காக எம்பெருமானிடத்தில் பண்ணும் பிரபத்தியும், உபாஸிப்பவர்களின் உட்பிரிவும், அதில் ஞானிகளுக்குண்டான சிறப்புஞ் சொல்லப்படுகின்றன.

1. என் அமரும் நெஞ்சனாய்—என்பாற் பற்றுள்ள மனமுடையவனாய். மயக்கற்று—ஸம்சயமின்றி. ஒன்றொழியாது—ஒன்றுதப்பாமல், ஸகலத்தையும். திண்மையுற—வலியுற, நன்றாக.

2. யாது அறிந்தால்—யாதொன்றை யறிந்தால். விவேகத்துணர்வு—விஜ்ஞானம்; அதாவது-ஸர்வேசுவரன் ஈனமான எல்லாப்பொருளுக்கும் எதிராய் அளவிலா அதிசயமும், எண்ணற்கரிய கல்யாண குணங்களும், அனந்தமான விபூதியும் உடைத்தாயிருக்கையால் சேதனாசேதனங்கள் எல்லாவற்றிலும் வேறுபட்டிருக்கிறான் என்பதை யறியும்படியான ஞானம்.

3. இயல்வான்—ஸித்தியின்பொருட்டு யத்தனம் பண்ணுகிறான். முழுது அறிவான்—உள்ளபடி யறிவான், பூர்ணமாய் அறிவான். அப்படி யுள்ளபடியே யறிபவன் ஒருவனுமில்லையென்னுந் தாத்பர்யத்தால் 'அரிது தான்' என்றார்.

4. புனல்—நீர். மனஞ்சேர்வியன் புலன்—மனம் முதலிய பெரிய இந்திரியங்கள். மான்—மஹத். ஆங்காரம்—அஹங்காரம்.

5. என்ற ஹுருவாக—ஜீவரூபமான எனது பிரகிருதி யென்று. உன்னு—தெரிந்துகொள். அமைந்து நிற்கும்—தரித்துக்கொண்டிருக்கும்.

6. பரிசு—விதம். பிறப்பு இறப்பு—உத்பத்தி லய காரணஸ்தானம். சேதனமாயும், அசேதனமாயும் எனக்கு சேஷப்பட்டதாயுமிருக்கும் இந்த இரண்டு வகையான பிரகிருதியி னின்றுந்தான் பிர்ம்மா முதலாக ஸ்தாவராந்தமாக ஏற்றமுந்தாழ்வுமாய்ச் சித்தும் அசித்துமாயுள்ள இந்தப் பூதங்கள் யாவும் உண்டாகின்றன. எனது பிரகிருதியில் உண்டானதுபற்றி இவை யாவும் என்னுடையவைகளேயாகும். ஆக, இப்படி ஸகலலோகங்களுக்கும் பிரகிருதிகள் காரணமாயிருப்பதுபோல் அப்பிரகிருதிகளுக்கு நான் காரணமாய் சேஷியாயிருக்கையால் எல்லாவுலகங்களுக்கும் நானே காரணமென்றும், நானே நாசகமென்றும், நானேசேஷி யென்றும் அறி என்பதாம்.

7. உன்னில்—ஆராய்ந்தால். ஞானம்பலம் முதலியவற்றால் என்னிலும் மேலான வேறு பொருளில்லை

என்க. இதெல்லாம்—பால்வழு வமைதி. சேதனசே தன ரூபமான இவ்வஸ்துக்களெல்லாம். நூல்—நூலில். மாமணிபோல்—முத்து முதலிய சிறந்த ரத்னங்களைப் போல. என்பால்—அந்தராத்மாவாய் நிற்கும் என்னி டத்தில். செறிந்து—காரியமான நிலையிலும் காரணமான நிலையிலும் எப்பொழுதும் சரீரமாய்ப் பிரிவின்றிச் சேர்ந்து. கோப்புண்டு செறிந்துநிற்கும் எனக் கூட்டுக. கோப்புண்டு—கோக்கப்பட்டு.

8. அப்பில்—நீரில். மதி இரவி சோதியும் நான்—சந்திர சூர்யர்களில் ஒளியும் நான். ஓங்காரம்—பிரணவம். விண்மிசை—ஆகாசத்தில். மிசை—ஏழாம் வேற்றுமையுருபு. பௌருடம்—பௌருஷம், ஆண்மை

9. புவி—பூமியில். கந்தம்—மணம். உயிர்—உயிர் நிலை. 'நற்றவனூன்' என்பதனை, நற்றவநான் எனத் திருத்திக்கொள்க. இனி, இருக்கிறபடியே கொண்டு தவன் என்பதற்குத் தவமாகின்றவனும் என உரைத்துக் கொள்ளலுமாம். பற்றலர்—பகைவர். கோளரி—சிங்கம்.

10. எப்பொருட்கும் வித்தா—ஸர்வ பூதங்களுக்கும் அழியாத வேர்முதலாய். நிலைநின்ற—ஸநாதனமாயுள்ள, அதாவது சாசுவதமாயுள்ள.

11. திண்மை—பராக்கிரமம். காமராகம்—ஆசாபாசம். அறஞ்செறியுங் காமம்—தர்மத்தோடு விரோதிக்காத காமம். ஆடவர்கள்—புருஷர்கள். ஏறே—சிங்கம்போன்றவனே. "ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லாம்—ஏற்றைக்கிளவி யுரித்தென மொழிப." என்பது தொல்காப்பியம். காணு-காணுக. சிறந்தவெலாம் என்றும் பாடம்.

12. குணம் மூன்று—ஸாத்விக, ராஜஸ, தாமஸங்கள். எய்ந்த—பொருந்திய. பொருளனைத்தும்— ஸாமான்யமாய் லோகத்தில் சரீரங்களாகவும், இந்திரியங்களாகவும், மற்றும் போக்ய வஸ்துக்களாகவும், போகத்துக்குரிய கருவிகளாகவு மிருக்கின்ற எல்லாப் பொருள்களும். என் தன்மையினுல் ஓாய்ந்தவென உன்னுக நீ—என்னிடத்திலிருந்து உண்டாய் எனக்குச் சரீரங்களாய் என்னிடத்தில் நிலைபெற்றிருக்கின்றன என்று அறி. யான் அவற்றில் நீங்கலுற நிற்பன்—யான் அவைகளினின்றும் பிரிவுற நிற்பேன். [என்றால், சரீரஸ்திதி ஆத்மாதீநமானுலும் ஆத்மஸ்திதிக்குச் சரீரத்தாலுஞ் சிறிது உபகாரமுண்டு உலகத்தில்; நமக்கோ இந்தப் பதார்த்தங்களெல்லாம் சரீரமாய் இருந்தாலும் இவைகளால் சிறிதும் உபகாரமில்லை. கேவலம் லீலைதான் இதற்குப் பிரயோஜனம் என்று தாத்பர்யம்.]

13. மோஹித்த—மயங்கிய. ஒங்கும் இறையாம் என்னை—ஏகரூபனாகவிருக்கும் ஈசுவரனை என்னை. முக்குணத்தால் மோகித்த இவ்வுலகம், மேலாய் ஓங்கும் இறையாம் என்னை அறியமாட்டாது என்று கூட்டுக. குணவிகாரங்களாய், ஈனங்களாய், க்ஷணந்தோறும் அழிவனவாய்ப், பூர்வகர்மானுஸாரமாகச் சரீரங்களாயும், இந்திரியங்களாயும், புசிக்கும்பண்டங்களாயும் திரிந்துள்ள பதார்த்தங்களால் மயக்கப்பட்டமையால் உலகம் அறிகிறதில்லையென்க.

14. குணமயி—குணஸ்வரூபையான. என்னையேயடைந்தியல்வான் என ஏகாரத்தை மாறுக. அரிது, இங்கு இன்மைப்பொருள் குறித்து நின்றது. 'தனக்குவமையில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்—மனக்கவலைமாற்றலரிது. என்னுமிடத்திற்போல. அடைதல்-சரணாகப் பற்றுதல்.

15. மூடர்-எல்லாப்பொருளும் எம்பெருமானுக்கு ஆட்பட்டிருக்க அதைத் தனக்கு ஆட்பட்டதாக நினைக்கும் விபரீதபுத்தியுள்ளவர்கள். நராதமர்கள்—ஸாமான்யமாய் என் ஸ்வரூபம் அறியப்பட்டாலும் என்வழி திரும்பமாட்டாதவர்கள். மாயையால்-வஞ்சக யுக்திகளால். அறிவின் பாடழிந்தார்—அறிவுகெட்டவர்கள்.

தீவினையார்—பாபத்தொழில் புரிபவர்கள். ஈசுவரனும் அவன் விபூதிகளும் (யுக்திகளைக்கொண்டும் இல்லை யென்று மறுக்கமுடியாதபடி) திடமாய் ஸ்தாபிக்கப் பட்டாலும் கேட்டபோதே பகைப்பவர்களாதலால் 'ஆசுரமாம் பாவஞ்சேர்' என்றார்.

16. மாடிழந்தான்—ஆர்த்தன்; இழந்துபோனசெல் வத்தை மீண்டும் அடைய விரும்பியவன். மாடு—செல் வம். "தேடியமாடும் நீடுசெல்வமும்" என்றார் பிறரும். வேண்டுணர்வோன்—ஜிக்ஞாஸு. வான்பொருளைத் தேடியிருப்பான்—அர்த்தார்த்தி. ஞானஞ்சேர்புற்றான்- ஞானி. "ஆத்ம ஸ்வரூபம் எம்பெருமானுக்கே சே ஷப்பட்டிருக்குந் தன்மையது" என்கிற அறிவுடையவ னாய் அந்த ஆத்மவஸ்துவோடு நில்லாமல் எம்பெருமா னைப்பெற ஆசைப்பட்டு அவனையே பெரும்பேறாக நினைத்திருப்பவன். நலம்—புண்ணியம். சேர்வர்— பஜிப்பர்கள்.

17. ஞானியதிகன்—ஞானிசிறந்தவன். எனெனில் அவன் பகவானை யடையவேண்டியவனுகையால் எப் பொழுதும் பகவானோடு அவனுக்குச் சேர்க்கையுண்டு. இவர்களுக்கோ பயன்கைகூடுமளவுந்தான். அப்படியே அவன் பகவானைத்தவிர மற்றொன்றையும் விரும்பான்.

இவர்களோ பகவானையும் விரும்பித் தமக்கென்று ஒரு பயனையும் விரும்புவார்களாதலினென்க. ஏகபத்தி—ஒரே பக்தி. உகக்கும்—ஸந்தோஷிப்பான்.

18. உதாரர்—வண்மையுடையோர். பகவானிடத்திலிருந்து எவர்கள் சிறிதாயினுங் கொள்ளுகிறார்களோ அவர்களைப் பகவான் தனக்கு எல்லாச் செல்வத்தையும் வழங்கிய பெரிய கொடையாளிகளாக நினைக்கின்றான் ஆதலால் உதாரர் என்றான் என்க. ஞானியெனு மற்றிவன்—ஞானியென்கின்ற இவனே. உயிரா—ஆத்மாவாக. ஞானியை ஆத்மாவாகச் சொல்லியது எதனாலென்றால், அந்த ஞானி பகவானைப்பிரிந்தால் தரிக்க மாட்டாததுபோலப் பகவானும் அந்த ஞானியைப்பிரிந்தால் தரிக்கமாட்டானாகையால் என்க.

19. பிறவி—ஜந்மம். அந்தந்து—முடிவில். நல்லான்—மகாத்மா. "இப்படி எம்பெருமானுக்கு ஆட்பட்டிருக்கையே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்" என்கிற ஞானவானைச் சரணம்புகுவதென்கிற விஷயம் ஸாமான்னியமாய்ச் சில பிறவிகளில்செய்த புண்ணியவசத்தால் வருவதன்று; கேவலம் புண்ணியஜன்மங்களெத்தனையோ எடுத்ததன்மேல் வருவதென்பான் "புண்ணியமார் பல்பிறவி பூண்டு" என்றும், "நான் வாஸுதேவனுக்கே

ஆட்பட்டவன், எனது ஸ்வரூபம், ஸ்திதி, பிரவிருத்தி யெல்லாம் அவனுடைய அதீனம்" என்கிற நினைவு பிறந்து, "நான் அடையவேண்டும் பயனும், அப்பயனை யடைவிக்கும் உபாயமும், மற்றும் நான் கோரியவெல் லாமும் அந்த வாஸுதேவனே" என்று பகவானை யுபா ஸிப்பன். அப்படிப்பட்ட பெருந்தன்மையோடு கூடிய புருஷன் கிடைப்பது லோகத்தில் மிகவும் அரிது என் பான், "எண்ணியுயிர்—எல்லாமும் வாசுதேவ னேதா னெனவுணர்ந்த—நல்லான் மிகவரிய னாட்டு" என்றும் கூறியருளினனென்க.

20. காமங்கள்—சப்தாதிவிஷயங்கள். கருத்தழிந் தார்—அறிவு கெட்டார். நியதம்—நியமம். பண்டை— பூர்வம். தேவதைகளென்றது இந்திராதி தேவர்களை.

21. அர்ச்சிப்பான்—அர்ச்சிக்கும்பொருட்டு. பான்- வினையெச்ச விகுதி. சலியாது—சலியாதிருக்கும்படி, திடமாக. அமர்ந்து—விரும்பி. அப்படியவர்கள் அர்ச் சிக்குந் தேவர்களெல்லாரும் எனக்குச்சரீரமென்று (சா ஸ்திரஞ் சொல்லுகிற விஷயந் தெரியாமல்) எந்தெந்த பக்தன் (என் சரீரமான) எந்தெந்த தேவதையைசிரத் தையோடு அர்ச்சிக்க விரும்புகிறானோ (அவன் என்னை யறியாமற்போனாலும் உள்ளபடியே என் சரீரத்தைத்

தானே யர்ச்சிக்கிறான் என்றநினைத்து) அவனவனுக்கு அவ்வவ்விதமான சிரத்தையைத் திடப்படுத்துகின்றேன் என்பது இப்பாட்டின் கருத்து.

22. அந்த விருப்பத்துடனே – அந்த மான) சிரத்தையுடனே. காமமவை—அபீஷ்டங்களை. ஆராதிக்கும்பொழுது இந்திராதிகள் பகவானுக்குச் சரீரமென்கின்ற விஷயத்தை அவர்களறியாமற்போனாலும் உள்ளபடியே யது பகவதாராதனமாகையால் அவர்கள் கோரிக்கையைப் பகவான் நிறைவேற்றி யருள்கின்றானென்க.

23. நிற்பது இலதாக நிகழும்—ஸ்திரமாக இராமல் முடிவுள்ளதாக இருக்கும். ஏனெனில் அந்த இந்திராதிதேவர்கள் அனுபவிக்கும் போகங்களெல்லாம் இவ்வளவென்றும், இத்தனை காலமென்றும் வரையறை யுற்றவையாகையால் அவ்விந்திராதிதேவர்கள் போகம் நசித்து நழுவும்போது (அவர்களை யாராதிக்கும்) இவர்களும் நழுவுவார்களாதலாலென்க. அமரர்—தேவர்கள்.

24. குறையற்று—அழிவற்றதாய். உயர்ந்து உயர்ந்த என் தன்மை—உத்தமமான மேலான என்னுடைய கொள்கையை. புந்தியிலார்—அறிவில்லாதவர்கள்.

ஓர்ந்தார்—அறிந்தார்கள். நின்றோரறியா என்பதனை நின்றோர் அறியார் எனத் திருத்திக்கொள்க.

25. அறிவரியேன்—அறிதற்கு அரியவனாக இருக்கிறேன். இயல்பிறப்பற்று ஏதம் குறைவிலனாய்—பிறப்பில்லாதனாய்ச் சிறிதும் அழிவற்றவனென்று. ஓராது—யமாட்டாது.

26. சென்று நிகழ்ந்து வரும்—கடந்து, கேழ்ந்து கொண்டு, இனிவருகின்ற. நன்கறிவன்—நன்றாக அறிவேன். குன்றுயர்ந்த தோளாய்—பர்வதம்போலுயர்ந்த தோள்களை யுடைய அர்ஜுனனே! சிந்தைக் கெட்டிய பிராணிகளிலொருவனுக்கும் காணப்படினும் "பரமபுருஷன்தான் இப்படி யாவரும் தன்னை ஆச்ரயிக்கும்படி வஸுதேவன் மைந்தனாய் அவதரித்திருக்கின்றான்" என்று அறிபவரில்லையாகையால், 'ஒன்றுமென்னையுணரமாட்டாது' என்று அருளிச்செய்தானென்க.

27. இச்சை—விருப்பம். முனிவு—த்வேஷம். குணவிகாரமான ஸுகம் துக்கம் என்கிற த்வந்த்வங்களில் எந்தெந்த விஷயத்தில் பிராணிகள் பூர்வஜன்மங்களில் விருப்பமும் வெறுப்பும் பாராட்டிவந்தார்களோ, மறுபடியும் அந்தந்த த்வந்த்வங்களே விரும்பப்பட்டவைகளாயும் வெறுக்கப்பட்டவைகளாயு மிருந்துகொண்டு

ஜாககாலத்தில்தானே ஸகல பிராணிகளையும் மயங்கச் செய்கின்றன. இதனால் என்னையடைந்தபோது ஸு கித்தும், என்னைப் பிரிந்தபோது துக்கித்தும் இருக்க வேண்டியவைகளான பிராணிகள், அவைகளிலேயே விருப்பத்தையும் வெறுப்பையும் பாராட்டுகின்றன ஞானியோ என்னைக்கிட்டியபோது இன்பமும, பிரிந்த போது துன்பமுமே ஸ்வபாவமாயிருப்பன்; அப்படிப் பட்ட ஸ்வபாவத்தோடுகூடிய ஞானியாக ஒரு பிராணி யாவது உண்டாவதில்லை யென்றபடி. ஏதம்—குற்றம் மோஹம்—மயக்கம். இருமைகொண்ட பெருந்துயர்— இன்பதுன்பங்களான துயரம்.

28. திண்ணியராய்—திடமான ஸங்கல்பத்தை யுடைத்தானவர்களாய். ஒன்ற—பொருந்த.

29. அப்புறம்—ஆப்புறமென நீண்டது, செய்யுள் விகாரம். முழு அத்தியாத்மம், ஸகல கர்மம் இவற்றின் தன்மையை நன்றாகத் தெரிந்துகொள்வார்கள் என்க

30. அதியெச்சம்—அதியக்ஞம். கதிபெற்றுப்போய் பொழுதும்—பிரயாணமான மரணகாலத்தும். போரா போகாத.

## அத்யாயம்—8.

# அப்யாஸ யோகம்.

ஏழாவது அத்தியாயத்தில் யாவரும் உபாஸிக்க வேண்டிய பரப்பிரம்மமான வாஸுதேவன் சேதனு சேதனங்களுக் கெல்லாம் பதி யென்றும், காரண னென்றும், ஆதார னென்றும், எல்லாப் பொருளும் சரீரமாயிருக்கையால் ஸர்வப்ரகாரமாகவு மிருக்கின்ற அவன் எல்லா சப்தங்களுக்கும் பொருளென்றும், யாவரையும் ஆள்பவனென்றும், ஸகல கல்யாண குணங்களாலும் அவனே மேன்மைப்பட்டிருக்கின்று னென்றும், ஸத்வ ரஜஸ் தமோமயங்களான தேஹமாயு மிந்திரியமாயும், மற்றும் புசிக்கும் பண்டங்களாயு மிருக்கின்ற சப்தாதி விஷயங்களால் அவன் மறைக்கப் பட்டிருக்கின்று னென்றும், மிகுந்த புண்யவசத்தால் கிடைத்த பகவத் சரணுகதியாலே அம்மறைவு நீக்கப்படு மென்றும், புண்ணியத்தின் வாசிக்குத் தக்கபடி இவன் பண்ணும் சரணுகதியின் சிறப்பால் ஐசுவரியம், கைவல்யம், பகவத்ப்ராப்தி என்ற பயன் வேறு படுகை பால் அதற்குத் தக்கபடி பக்தர்களும் வேறுபட்டிருப் பார்க ளென்றும், எம்பெருமானை அடையக் கோரி பவன் எப்பொழுதும் அவனையே நம்பி அவனிடத்தில்

விசேஷ பக்தியைப் பண்ணி எம்பெருமானுக்கு மிகவும் இனியனாய் இருக்கையாலே அவன் யாவரினுஞ் சிறந்த வனென்றும்,அப்படிப்பட்டவன் கிடைப்பது அரிதென் றும் அருளிச்செய்து, இம்மூவர்களும் அறியவேண்டு மவற்றையும் கைப்பற்றவேண்டு மவற்றையும் அருளிச் செய்தார்.

அப்படி யறியவேண்டியதாயும் அடையவேண்டியதா யும் பிரஸ்தாபிக்கப்பட்டவைகளையே இந்தஎட்டாவது அத்யாயத்தில் விவரிக்கின்றார்.

1. இறைவா—தேவனே! ஏது பிரமமதாம், ஏது அத்தியாத்துமமாம், ஏது கருமமாம்—ஜராமரணங்களை யொழிப்பதற்காக எம்பெருமானை யாச்ரயித்து யத்த னஞ்செய்யும் மோக்ஷார்த்திகளுக்கு அவசியம் அறிய வேண்டிய விஷயமான பிரம்மமாவதென்ன? கர்மமாவ தென்ன? அத்தியாத்மமாவதென்ன? ஏதாம்அதிபூதம் ஏதாம் அதிதெய்வம்-ஐசுவரியத்தைக்கோரியவர்களுக்கு அறியவேண்டிய விஷயமான அதி பூதமாவதென்ன? அத்தெய்வமாவதென்ன? ஏதாம் அதியெச்சம்—இவர் கள் மூவரும் அறியவேண்டியதான அதியக்ஞமாவ தென்ன? எங்ஙன் இயலாம்—அந்த அதியக்ஞத்தின் தன்மை யெப்படிப்பட்டது? அதிஎச்சம்—அதியக்ஞம்.

2. நல்நெஞ்சு என்றது—சிக்ஷிக்கப்பட்ட அந்தக்கரணத்தை. அடைவே—க்ரமமாக. மைம்மால்—கார்மேகவண்ணனான திருமால். மை—அஞ்சனமுமாம். பார்த்தனவன் என்பதில் அவன்என்பது பகுதிப்பொருள் விகுதி.

3. அக்கரம்—அக்ஷரம். இங்கே அக்ஷரமென்று சொல்வது ப்ரக்ருதியினின்று விடுபட்ட ஆத்மஸ்வரூபத்தை. பஞ்சாக்னிவித்தையில் அறியவேண்டியதாகச் சொல்லப்பட்டதும், ஆத்மாவோடு ஸம்பந்திப்பதுமான ஸ்தூலஸூக்ஷ்மமும், அதன் வாஸனை முதலானதும் அத்யாத்மமாமென்பார் 'தொக்கவசித்தின் தொடாதன்மை யத்தியாத்துமமாம்' என்றார். [ஆக, இவ்விரண்டிலும் ஒன்றைப்பற்றவேண்டியதாயும், ஒன்றைவிடவேண்டியதாயும் மோக்ஷார்த்தியானவன் அவசியம் அறியவேண்டும் என்க.] கர்மமாவது:—மானிடத்தன்மை முதலியவைகளுக்குக் காரணமாய், சாஸ்த்ரத்தில் சொன்னபடி ஸ்திரீகளுடன் புணர்ந்து வீரியத்தை விடுகை. [மோக்ஷார்த்தி இதையும் வெறுக்கவேண்டியதாயும் அழிக்கவேண்டியதாயும் அறியவேண்டும்.] தன்மை—ஸ்வபாவம்.

4. பூதபரிணாமம்—பூதத்தினது க்ஷரிக்குந் தன்மை. அதாவது, ஆகாசம் முதலிய பூதங்களில் ஓர் விகாரமாய் வேறுபட்டுத் தோற்றும் சப்தம், பரிசம் முதலிய குணங்களும் அவைகளின் ஆதாரங்களும். [இதை யறிவதாவது—ஐசுவரியார்த்திகள் இவைகளைத் தங்கள் பேறாக நினைக்கவேண்டுமென்பது.] அதிதெய்வமாமது—தைவத்தின்மீதிருப்பது; அதாவது இந்திரன் பிரமன் முதலிய எல்லாத் தேவர்களுக்குமேலாயிருப்பது. துய்க்குமவன்—அனுபவிப்பவன், புருஷன். [இதை யறிவதாவது—அப்படிப்பட்ட போகங்களைப் புஜிப்பவனாகத் தம்மை ஐசுவரியார்த்திகள் நினைக்கவேண்டுமென்பது.] அதியெச்சம் இறையாம் நான் என முடிக்க. [என்னை யறிகையாவது:—என் சரீரமான இந்த இந்திராதிகளுக்கு அந்தராத்மாவாயிருக்கும் என்னையே யக்ஞங்களால் ஆராதிப்பதாக இம்மூவரும் மஹாயக்ஞம் முதலான நித்ய நைமித்திக கர்மங்களை யனுஷ்டிக்கும்போதெல்லாம் நினைக்கவேண்டுமென்பது.]

5. அந்தக்காலம்—மரணகாலம். எய்தும்—அடைவான். சங்கை—ஸம்சயம். [ஆதிபாதன் முதலானோர் அந்திமகாலத்தில் நினைத்திருந்தபடி மிருகங்களுக்கு யமானமான வடிவத்தை யடைந்தாற்போல என்றபடி.]

6. முடிவில்—மரணகாலத்தில். உன்னி—நினைத்து. ஊன்வந்த ஆக்கை—மாமிசத்தாலாகிய சரீரத்தை. அணையும்—அடைவான். இறுதிக் காலத்தில் எதை நினைத்துக்கொண்டு பிராணனை விடுகிறானோ பின்னர் அதை அடைவான் என்க.

7. ஆதலால்—(புருஷன் முன்பு தான் எந்தவிஷயத்தில் பழகியிருக்கின்றானோ அந்த விஷயமாகவே அந்திம காலத்தில் நினைவு உண்டாகும்) ஆகையால். நீதமுசேர் வெஞ்சமம்—குற்றமற்ற நல்ல யுத்தத்தை. மனம் புத்தி—மனமும், புத்தியும்.

8. எஞ்சாத—குறைவுபடாத. சீலம்—அப்யாஸம். அதாவது, நித்ய நைமித்திக கர்மங்களுக்கு விரோதமில்லாத ஸகலகாலங்களிலும் உபாஸ்யவிஷயத்தை நினைத்துக்கொண்டிருப்பது. செறிந்தியலும்நெஞ்சு—புறம்பே செல்லாத மனம். துஞ்சாத—சோம்பாத. பூருடன்—புருஷன்.

9. எண்மதியன்—ஸர்வஜ்ஞன். தொல்லையான்—புராதனன். எல்லாம் நியமிப்பான்—எல்லாவற்றையும் ஆளுபவன். நுண்மைப்பொருளுக்கும் நுண்ணியான்—அணுவுக்கும் அணுவாய் விளங்குபவன். திண்மை உலகளிப்பான்—வலிமை பொருந்திய உலகத்தை

யெல்லாம் சிருஷ்டிப்பவன். உன்னரியான்—அசிந்யன், சிந்திப்பதற்கு அரியவன். இரவிவண்ணன்—சூரியனைப்போன்ற நிறமுடையவன்.

10. வாயுவினைத் தன் புருவமத்தியத்தில் வைத்துணர்வான்—தன் புருவங்களுக்கு நடுவில் பிராணனை வைத்து அங்கே பகவானை இடைவிடாமல் சிந்திக்கின்றவன். சேயுயரும்—மிகவுயர்வான். சலியாச்சிந்தை—அசைவுறாத மனம்.

11. அக்கரமாய் யாதொன்றை ஆய்ந்த மறையோர் உரைப்பர்—அக்ஷரமானதாக (அதாவது—பருக்காமை முதலிய குணங்களுடன் கூடியதாக) யாதொன்றினை ஆராய்ந்த வைதிகர்கள் சொல்லுகிறார்களோ. செக்கசையார்—வீதராகர், நிஷ்காமரானவர்கள். இயவர்—யாவர். துறவுஎய்ந்து—பிரம்மசரியத்தைப் பொருந்தி. அப்பதத்தை ஆய்ந்துரைப்பன்—அந்தப்பதத்தை யாராய்ந்து சுருக்கமாய்ச் சொல்லுவேன். [ஸகல வேதாந்தங்களாலும் அறியவேண்டியதான அக்ஷரமென்னும் ஸ்வரூபத்தை (அதாவது ஜீவனை) எப்படி உபாஸிக்க வேண்டுமோ அதைச் சொல்லுவேன் என்றபடி.]

12. அகவாய்—இருதயம். செறி யோகன்—யோகமென்னுந் தாரணையை யடைந்தவன். ஓங்காரம்—ஓம்

என்கிற ஏகாக்ஷர பிர்ம்மத்தை. உடலொழித்து—சரீரத்தைவிட்டு. பரமகதி போம்—பரமகதி அடைவான். [அதாவது,—பிரகிருதிக்குப் புறம்பாய் எனக்கு ஸமமாய் மீண்டும் திரும்பவேண்டாத ஜீவாத்ம ஸ்வரூபத்தை யடைகிறான்.]

13. என்றும் எனைக்கூடும் யோகிக்கு—எப்போதும் என்னையே சிந்திக்கின்ற(என்றால், நான் அவனுக்கு மிகவும் இனியவனாகையால் என்னை நினைத்தாலொழியத் தன்னைத் தரிக்கமாட்டாதவனாய்க் கேவலம் இன்பமயமான என் சிந்தையை எவன் செய்கின்றானோ) அந்த யோகிக்கு. நன்றுபெற எளியன் நான்—நான் நன்றாகப் பெறுதற்கு எளியவன். [அதாவது—எளிதில் அடையக் கூடிய என் ஹாவமான ஐசுவரியாதிகளை யல்ல நான் கொடுப்பது; கேவலம் அருமைப்பேறான நானே எளிதில் கிடைக்கின்றேன். என்றால்—அவன் பிரிவை ஸகிக்கமாட்டாமல் நானே அவனை வரித்து, என்னை அடைவதற்கேற்ற பக்குவமான உபாஸந ஞானத்தையுங் கொடுத்து, அதன் விரோதியையும் ஒழித்து, என்னிடத்தில் இனிமையான புத்தியையும் உண்டுபண்ணுகிறேனென்றபடி.]

14. மின்னை நிகர் பிறப்பு—மின்னலை யொத்த பிறப்பு. ஞெஞ்சா—ஓயாத. மேவலுரார்—அடையமாட்டார்கள். அன்ன—அப்படிப்பட்ட. பிறங்கும்—விளங்கும்.

15. வேதா உலகளவும் உலகு—பிர்ம்மாண்டத்தில் பிர்ம்மலோகபர்யந்தமுள்ள போகைசுவரிய ஸ்தானமான உலகங்கள். மீண்டுவரும்—திரும்பிவருந் தன்மையை யுடையவைகள். ஓதா நின்றார்கள்—சொல்லுகிறார்கள். போதார்ந்த—மலர்கள் பொருந்திய. தார்—மாலை. போது—மலரும் பருவத்திலுள்ள அரும்பு. கௌந்தேயா—குந்தி புத்திரனே. என் அடைந்தார்—என்னையடைந்தார். வாரார் மறுபிறப்பின் வாய்—மற்றொரு ஜர்மத்தில் வரமாட்டார்கள். [அதாவது, மறுஜன்மமில்லை யென்றபடி.]

16. அயன்—அஜன், பிர்ம்மா. ஆயிரம் மேல் உகம்—ஆயிரஞ் சதுர்யுகம்.

17. பகலினிடை யுதிக்கும்—பகல் வரும்போது உண்டாகும். அடங்கிப்போம்—லயமாய்ப்போகும்.

18. தொக்கமர் இப்பூதம்—ஸமூகமாகவுள்ள இப்பூதங்கள். மிக்கு அவசமாய்—மிகுந்த பரவசமாய்க்கொண்டு. வீயும்—அழியும்.

19. எல்லாப் பொருளும் இறுதியினைக் கூடியே நில்லாத காலத்தும் நிற்குமதாய்—ஆகாசம் முதலிய எல்லாப் பூதங்களும் தங்காரியங்களோடும் காரணங்களோடும் ஒருங்கே நில்லாது நசிக்குங் காலத்திலும் (அவைகளிலிருக்கிற) தான் நசியாததாய். அசித்தின்மேலாகி—அசேதனப் பிரகிருதியைக் காட்டிலும் (புருஷார்த்தமாய் இருக்கையால்) உத்க்ருஷ்டமானதாய்.

20. நண்ணோர்கொள் அக்கரமா நவுரைக்கும்—அவ்யக்தமான அக்ஷரமென்று நூல்கள் கூறும். அப்பொருளை எண்ணோர் பரமகதி என்றுரைப்பார்—அப்பொருளைத்தான் வேதவித்துக்கள் பரமகதி யென்பார்கள். நண்ணியது மீளார்—அதையடைந்தவர்கள் மறுபடியுந் திருப்புவதில்லை. (இதுதான் கைவல்யமாவது.) எனக்கதுதான் மேலாய் ஒளிசிறந்து மாளா இருப்பிடமாம்—எனக்கு அதுதான் என்னுடைய நியமன ஸ்தானங்களில் மேலானதாய் ஒளியிற் சிறப்புற்று மாளாமலிருக்கின்ற ஸ்தானமாகும். [என்றால், அசேதனமான பிரகிருதி ஒரு நியமன ஸ்தானம். அத்தோடு கலந்திருக்கிற ஜீவனென்னும் பிரகிருதியானது இரண்டாவது நியமன ஸ்தானம். அவ்வசேதனத்தைவிட்டுப் பிரிந்த முக்த ஸ்வரூபமான ஜீவன் மேலான நியமன ஸ்தானமென்றபடி.] ஒளி—காந்தி, இங்கே ஞானமென்று

சொன்னத்தக்கது; அப்பொழுது, 'மேவாய் ஒளிசிறந்த' என்பதற்கு, பிரகிருதியோடு கலந்த மித ஞானமான ஜீவ ஸ்வரூபத்தைக் காட்டிலும் மேலானதாய், அபார ஞானமானதாய் முக்த ஸ்ரூபமாயிருக்கிற என்று அர்த்தமாகிறது.

21. பரம்புருடன்—பரமபுருஷன். அனன்னியமாஞ் சிந்தைக்கு—மற்றொன்றை நாடாத பக்திக்கு. பரமபுருஷன், பக்தியால் எளிதாக அடையக்கூடியவனென்க.

22. யாதுவழி செல்லுங்கால் மீள்வர்—ஐசுவரியத்தைக் கோரின புண்ணியவான்கள் எந்த மார்க்கமாய்ச் சென்றால் திரும்புகின்றார்களோ. வழி என்றது அர்ச்சிராதிமார்க்கத்தை. "யத்ரகாலே" என்ற கீதா வாக்கியத்தில் கால சப்தத்திற்கு ஸ்ரீபாஷ்யகாரர் மார்க்கமென்று பொருள் செய்ததை யனுசரித்து இந்த நூலாசிரியரும் 'யாதுவழி' என்று கூறினாரென்க. "மார்க்கமானது பகல் தொடங்கி ஸம்வத்ஸரம் வரையிலுள்ள காலாபிமானி தேவதைகளால் நிறைந்திருக்கையால், மார்க்கத்தை யிங்கே காலசப்தம் காட்டுகிறது" என்பது ஸ்ரீபாஷ்யம்.

23. அங்கி—அக்னி. முற்பக்கம்—பூர்வபக்ஷம், சுக்கிலபக்ஷம். வடஅயனம்—உத்தராயணம். பிர்ம்மத்தையுன்னும் (அறிந்த) மனத்தவர்கள் உத்தராயணத்தில் சுக்கிலபக்ஷத்தில் பாபிர்ம்மத்தையடைகிறார்கள் என்க.

24. தூமம்—புகை. பிற்பக்கம்—அபரபக்ஷம், கிருஷ்ணபக்ஷம். தென்னயனம்—தக்ஷிணாயனம். போமவன்—போகின்ற புண்ணியகர்மஞ் செய்தவன்.

25. இருமை மேவி—இரு தன்மையை யடைந்து. கோளாறு—துன்பம். இக்கோளாறு என்பது கிரக சாரம் என்னும் வடமொழியின் நேரான மொழிபெயர்ப்பு. கிரகிப்பது என்னும் பொருளுள்ள கிரகம் என்பது கோள் எனவும், சாரம் என்பது ஆறு [வழி] எனவும் ஆயிற்று. ஒருவனுக்குத் துன்பம் வந்தற்றகாலத்து அத்துன்பத்தைக் கிரகசாரபலனைச் சொல்வது உலக வழக்காதலால் இங்கும் துன்பத்தைக்கோளாறன்றார் இவ்வாசிரியரும். வெளிது கரிதா யிருமைமேவி யுலகேய்ந்த அரிய நெறி என்றது—சுக்லகதியென்கிற அர்ச்சிராதி மார்க்கமும், கிருஷ்ணகதி யென்கிற தூமாதி மார்க்கமுமாய் உலகத்திற்குச் சாசுவதமாய் ஏற்பட்ட இரண்டுமார்க்கங்களை. இவற்றுள் சுக்லகதியாற்சென்றவன் திரும்புகிறதில்லை. கிர்ஷ்ணகதியாற் செல்லும

## அத்யாயம் 13.

# க்ஷேத்ர க்ஷேத்ரஞ்ஞ விபாகயோகம்.

கன்ம முயிருணர்வா றகட்டவரு முன்றுறு
நன்மையிறை பதிநு வாறு — தன்மையுடன்
காயமுயி ரீசன் கருமமறி வன்புலனை
யேயவமைத் தேனுமீ ரறு.

சங்கு மசலாசி யேயாத்தபதின மூன்றுமோத
தாங்குடல மாருயி ராப்புறுத — னீங்குநெறி
தன்மையுடன் மற்றுத் தகைமைபெறச் சோதித்த
நன்மையுடன் சொல்லு நயத்து.

இந்தச் சரீர மிகல்விசயா கேத்திரமென்
றந்தப் பரிசறிவா ராய்ந்துரைப்பார் — முந்திதனை
யீங்கறிவான் கேத்திரஞ்ஞ னென்றுமுயி ரென்றவனை
யாங்கறிவார் சொல்வா ரமைந்து. 1

கேத்திரங்க ளெங்குமமர் கேத்ரஞ்ஞ னாகப்
பார்த்தறிவு மேவுநீ பார்த்தனே—சீர்த்த
வினையிரண்டு மற்றறியு மிந்தவறி விங்கு
நனையிலறி வென்றறிவ னான். 2

அக்கேத் திரம்யாதா மாறுசெய்வா றெவ்விகற்ப
மிக்கெதிலா மெம்மையமாய் மேவுமருந்—தக்கவிவன்
றானேவ னெத்தகையோன் சார்ந்தசுருக் கத்ததனை
யானோர்ந்து சொல்லக்கே ளிங்கு. 3

போத முனிவர் புகல்வர் பலவகையே
யேதுவ் விவிதக்கால் வேறுபட—வோதுமது
வேதாந்த சூத்திரங்கள் வேறுரைக்கு மேதுவுடன்
மீதார்ந்த நிச்சயத்தா னிங்கு. 4

பூதங்கள் பூதாதி புத்தி பிரகிருதி
யோதிந்தி யம்பதினொன் றொண்புலனைந்—தீதில்வரு
மிச்சைசினை மின்பதுன்ப மேனுமுடல் சேதனைதா
தச்சிருப்பி தாகுஞ் சுருக்கு. 5

இவ்வியல்பிற் கேத்திரந்தா னின்னே சுருக்காக
வவ்வினைசேர் காரியத்தோ டாய்ந்துரைத்தேன்—செவ்
ஞருயிரின் றன்மை யறிவா முபாயங்கள் [வியுட
சேருநெறி கேண்மின் சிறந்து. 6

மானமுட னேடம்பம் வன்கொலையின் மாறுநிலை
யானபொறை செவ்வை யமர்குருவின்—பானணுகல்
சுத்தியமர் வுற்ற துணிவுடைமை சூழ்மனத்தைச்
சித்தி யளவுஞ் செறுப்பு. 7

இந்திரியங்கள் சார்பொருளி லென்றுந் துறந்திருத்தல்
வந்தியலு மாங்கார மற்றொழிதல்—புந்தியினாற்
சென்ம மரணஞ் சரைநோய்சேர் துக்கமாம
புன்மை யுணரும் புணர்ப்பு. 8

நின்ற நசையறுத னேர்புதல்வர் தாரமனை
யொன்று மனமங் கொழிவித்த—லென்றுஞ்சம
னோர்ந்தே யிருத்த லுகப்புவெறுப் பாம்பொருள்கள்
சேர்ந்த வமலிற் றெளிந்து. 9

என்பா லனன்னியமா யேய்ந்தபுறம் போகாத
வன்பாரும் பத்தி யமர்வுறுத—லின்பார்
தனியிடத்திற் சார்தல் சனங்குழுவு கண்டால்
கனியுகப்புச் சேரா நலம், 10

ஆருயிரின் மேலறிவி லாய்ந்தென்று நின்றமர்வு
பேருணர்வாந் தத்துவத்தின் பீடறிவு—சீருடைய
மெய்ஞ்ஞான மாமதென மிக்குரைத்தேன் வேறுளது
பொய்ஞ்ஞான மாகும் புறம். 11

இவ்வுடம்பின் மேலாம் புருடன்கண் டேய்ந்திசைவா
னவ்வுடம்பு தாங்கி யதிற்றுய்ப்பான்—செவ்வியதிற்
றங்கியபே ரீசனுய்த் தான்பரம வான்மாவா
மிங்கியம்பப் பட்டா னிவன். 22

இந்தப் புருடனையு மிந்த வசித்திதனையு
மந்தக் குணங்களுட னய்ந்தறிவா—னெந்தவழ்வன்
எவ்வாறு மேவு மியல்பாற் றிரிந்திடினு
மிவ்வா றவன்பிறவா னிங்கு. 23

மிக்கார் சிலர்செஞ்சால் மெய்ப்பரதி யானத்தாற்
றக்கா ருயிர்காண்பர் தாஞ்சிலர்கள்—எக்கால
சாங்கியயோ கந்தன்னுற் றனகரும யோகத்தா
லாங்கறிவர் வேறுசில ராய்ந்து. 24

மற்றிங்கவ் வாறறியார் மன்னறிவார் பாற்கேள்வி
யுற்றன் புடனே யுபாசிப்ப—ரற்றமா
மந்த வவரு மரும்பவத்தைத் தாங்கடப்பர்
இந்த மிகக்கேள்வி யேய்ந்து. 25

எவ்வளவு நின்றியலு மிந்தப் பொருளுண்டா
மவ்வளவு தன்னை யடல்விசயா—விவ்வகையே
ஒத்து மசித்துஞ் சிறந்த புணர்ப்பதனு
லொத்தியல்வ தென்றே யுணர். 26

ஒத்துப் பொருளனைத்தி லுள்ளே யமரவிருந்
தத்துப் பரமேச னாகியே—தத்துவங்கள்
மாயு மளவதிலு மாயா தவனைக்கண்
டாயுமவன் கண்டா னமைந்து. 27

எவ்விடத்துந் தானிறையா யெய்ந்திருக்கு மிவ்வுயிர்தா
னவ்விடத்தி லொத்தியல்வ தாவறிவா—னிவ்விடத்திற்
றன்னைத்தன் னெஞ்சதனாற் றானலியான் றானடையும்
பின்னைப் பரகதியாம் பேறு. 28.

எய்ந்த பிரகிருதி யித்தாற் கருமமெல்லாம்
வாய்ந்தியலு மென்றறிந்த மன்னுயிரை—யாய்ந்திவ
கத்தா விவனென்று காண்பா னெவனவனே [னைக்
சத்தா முணர்வுடையான் றான். 29

எப்போது பூதத் தியல்வேறு பாட்டினையு
மொப்பொருவா வொன்றி லுறுவகையுந்—துப்போ
பந்தப் பரப்புமுணர் பாவகனப் போதுயிரா [டார்
மந்தப் பிரமமடைந் தாம். 30

இதனையு மாதி யிலனாற் குணமிலனாற்
பதகடவோ விந்தப் பரமான்மா—தங்கியுடல் [யான்
நின்றிடினு மௌந்தேயா னேயொன்றுந் தான்செய்
என்றுமதிற் றோய்விலனே மெய்ந்து. 31

ஓங்குவிசும் பெங்கு முளதாயு நுட்பத்தா
லாங்கதனிற் றோயா ததுபோல—தாங்குடலை
மேதிலுநின் றாலு மிலகுமுயி ரவ்வண்ண
மாதியல்வாற் றோயாது மங்கு. 32

எவ்வா றிரவிதா னிந்த வுலகனைத்து
மிவ்வா றெழில்விளக்க மெய்துவிக்கு—மவ்வாறு
பார்த்தனே யிவ்வுடலை மெல்லாம் பரந்துயிர்தான்
சீரதனாற் றான்விளங்குஞ் சேர்ந்து. 33

காய முயிரிவற்றின் கண்ணார் பிரிவவ்வா
றேய வறிவா மெழிற்கண்ணோன்—மேயவுடல்
வீடமர்வு தானு மிகவுணர்வார் தாம்பரமாம்
வீடமர்வர் தன்மையினைப் பெற்று. 34

இத்தன்மை யாலுடலு மிவ்வுயிருஞ் சேர்ந்தியலு
மத்தன்மை யாமாப் பவிழ்விரகு—மெய்த்தன்மை
யோர்ந்த பதின்மூன்று மோத்திற் குரைத்தமுடிந்
தாய்ந்தபொரு ளாய்ந்தோ மறிந்து.

## அத்யாயம் 14.

## குணத்ரய விபாகயோகம்.

முக்குணங்கள் பாதத்து முட்டுகின்ற நேர்பாதவு
மக்குணங்க ணீக்குவிக்கு மவ்விரகு—மிக்குயர்ந்த
கீதை பதினலா மோத்துக் கிளாந்துரைக்கும்
போதத் தியல்பாற் புரிந்து

மற்றுமுனக் கின்ன மனவறிவின் மேலறிவை
யுற்றுணரும் வண்ண முரைக்கின்றே—னற்றமறை
யாதறிந்த மாமுனிவ ரிப்பவம்விட் டெய்தினார்
மீதமருந் தன்மையினை மிக்கு. 1

இந்த வறிவை யினிதார்ந்திங் கென்னொப்பா
மந்த வுயர்வை யடைந்தவர்கள் — பந்தமுடன்
சற்கத்தி லும்பிறவார் தாந்துயரஞ் சாரார்க
ளொற்கப் பிரளயத்தி னுள். 2

மிக்க பிரமம் விறல்யோனி யென்றுரைக்கத்
தக்க தெனதசித்திற் சார்வுபெறத் — தொக்கவுயிர்
கெற்பத்தை யான்சேர்ப்பன் சேழ்கிளரும் பூதங்க
ளுற்பத்தி சேருமிதி லுற்று. 3

இங்குலகில் யோனிகளா மெத்திறத்து மூர்த்திகளா
யங்குதயஞ் செய்யு மவைதமக்குப் — பங்கமிலா
விந்தப் பிரமமே யோனி கருவளிக்கு
மந்தப் பிதாநானே யாங்கு. 4

சத்துவ ரசோதமமாய்ச் சாருங் குணமூன்று
மொய்த்த பிரகிருதி யுள்ளவையா — மித்தகைய
வாருயிரைத் தேகத் தமரப் பிணிக்குமே
சீருயருந் தோளாய் செறுத்து. 5

ஆங்கவற்றிற் சத்துவந்தா னொன்றழுக்கற் றூர்தலினு
லீங்கொளி செய்தலுநோ யீடழித்துப் — பாங்கில்
வருஞ்சுகத்தில் மற்றறிவின் மன்னுநசை தன்னாற்
பொருந்துயிரைக் கட்டும் புணர்ந்து. 6

பாகமதின் றன்மை ராசதமாங் கௌந்தேயா
தாகமுடன் சங்கந் தனைவிளைக்கு—மாகஙினை
மற்றதுதான் கன்மதத்தில் வன்னசையாற் றேகிதனை
யுற்றமரக் கட்டு முறைத்து. 7

தம்மறிவு கேடுதருந் தானறிநீ மோக
மமருயிர்கட் கெல்லா மளிக்குந்—தமமென்று
தோராமை சோமப லுறக்கத்தாற் பார்த்தனே
சோராமற் கட்டுந் துணிந்து. 8

சத்துவம தின்பந் தனிற்றுவக்குந் தானிரசத்
தொத்தியலுங் கன்மந் துவக்குவிக்கு—மைத்தும்
மன்னறிவு தன்னை மறைத்திட்டோர்ப் பின்மையினிற்
றன்னமிகத் தான்றுவக்குஞ் சூழ்ந்து. 9

முக்குணங்க டம்மின் முதற்குணந்தான் மற்றிரண்டு
மொக்க முக்கி யுறமேலா—மிக்க
விடைக்குணந்தான் பார்த்தனே மற்றிரண்டு மிங்கே
கடைக்குணமு மவ்வாறு காண். 10

பொறிவாயி லெங்கும் புணரு மொளியா
மறிவான தெப்பொழுதுண் டாகுங்—குறியாலே
மன்னுடம்பி லப்பொழுது வாய்ந்துயருஞ் சத்துவமா
மென்னுமது தானறிவா னிங்கு. 11

ஈயாமை வீணுழற்றி யெய்ந்தகரு மத்தொடக்கஞ்
சாயா புலனொழிச்சி தன்னுறைகை யோயாம
லுண்டா மிவைகண்டா யுற்றிபசத் தோங்கதனல்
வண்டாருந் தார்விசயா மற்று. 12

மன்னுமுணர் வில்லாமை யொன்றின் முயல்வறுதன்
மன்னுமுயி ரோர்ப்பின்மை மாமோக—மென்னுமிவை
நீதி லுயர்தமத்தின் மேவுமவை யாகநீ
கோதில் குருமுதல்வா கொள். 13

சத்துமிக் கோக்கந் தரும்பொழுதிற் றன்மரணத்
தொத்துடம்புவிட்டவுயிருடையோன்—றத்துவத்தின்
மேலறிவு சேர்ந்தார் மிகவமல மாங்குலத்துச்
சாலவவன் றன்பிறக்குஞ் சார்ந்து. 14

கன்மரயந் தோர்குலத்திற் காதலுடன் றன்பிறக்கும்
வன்மையிர சத்துயர்வின் மாய்ந்தவவ—னன்மையிலா
மூட ரிடைப்பிறக்கு முழுதந் தமத்துயர்வில்
நீடை யுறமரித்தான் பின். 15

நீதி கருமத்து நின்மலமா நற்பயனைக்
கோதின் முதற்குணத்தே கூறுவரான்—மீதியலுந்
துக்க மிடைக்குணத்திற் சூழ்பயனும் பிற்குணத்திற்
றக்க வறிவின்மை தான். 16

முற்குணத்தி லாகு முழுதுணர்வு தானிடையி
லற்குணத்து லோப மதுவுண்டாம்—பிற்குணத்து
லோராமை மோக முணராமை யுண்டாகுஞ்
சீரார் புகழ்விசையா சேர்ந்து. 17

மேலடைவர் முற்குணத்தோர் மேவு நடுக்குணத்தோர்
சாலநடு வாமுலகிற் றனிற்பர்—ஞாலத்துப்
பின்னாங் குணத்தியலவோர் பீடழிவர் கீழ்மையினை
யெந்நாளுஞ் சேர விழ்ந்து. 18

மிக்க குணமவற்றில் வேறுபட்ட கத்தாவைத்
தக்க வுணர்வுடையோன் றானுணரான்— மெருக்ககுணந்
தன்னிற் பரமெனவுந் தன்னறிவான் சேருமே
யென்னிற் பரத்தன்மை யேய்ந்து. 19

இங்குடல மேவியம ரிக்குணங்கண் மூன்றினையு
மங்கும் வகைகடந்து மன்னினவன்—றங்கு
பிறப்பிறப்பு மூப்புப் பிணிவிடுத்துத் தன்னுஞ்
சிறப்பமுதஞ் சேருஞ் சிறந்து. 20

இவ்வளவிற் பார்த்த னியம்பினா னிங்கிறைவா
வவ்வகைசேர் முக்குணத்தையா கடன்றேன்—எவ்வகை
சேருமடையாளத்தன் செய்தொழிலேதெங்ஙனே [யிற்
சீருடனித் தைக்கடப்பான் செப்பு. 21

ஈண்டவனுக் கண்ண னியல்பின் றகவுரைத்தான்
பாண்டவனை நோக்கிப் பரந்தவொளி—யீண்டியற்றி
மோகமுள வற்றை முனியானு மீண்டடைந்து
வேக நசையிலான் மிக்கு. 22

மூன்றுக் குதாசீனன் போலிருக்கு முக்குணங்க
டன்றாற் றலைந்திடனுந் தான்சலியான்—மன்னுகுணஞ்
செய்திவை யென்றிருக்குஞ் செய்தொழிலிற் சேட்டி
மெய்திருந்து நெஞ்சடையான் மேல். [யான்

தன்சுகத்துந் துக்கத்து நானசம மாயத் தன்னைமாந்து
பொன்கலுடே ரோடிதளிர்புத்தியொத்தோன்—அன்பர்
வெறுப்பரிடை யொப்போன் மிகுபழிநன் கீர்த்தி
நிறுத்தசம நிற்கு நிகழ்ந்து. 24

தன்னமரு மானமவ மானத்தா னண்ப [வருஞ்
றெறுன்னவர்தம் பக்கத்து மொத்தியல்வான்—மன்னு
செய்ம்முயற்றி யெல்லாஞ் செய்யா னவன்குணங்கண்
மெய்ம்முயற்றி யார்கடந்தான் மிக்கு. 25

என்னைப் புறம்போகா யோகமாம் பத்தியினுன்
மன்னப் பயின்று மருவுமவன்—றன்னமரப்
பேசுகுணஞ் செற்றுப் பிரமமாந் தன்மையினை
மாசில்குணஞ் சேர்ந்திடுமே மற்று. 26

குன்றா வமுதக் குணப்பிரம மாமுயிர்க்கு
நன்றா யிருப்பிடந்தா னானே—னின்றருந்
தன்மப் பயனுக்குந் தானொருமை சார்சுகமா
நன்மைக்கு மென்று நயந்து. 27

க[illegible]தித்துவ காததாவாக தன்மையுமக கட்ட விழுப்பு
விட[illegible]த திகழுமுதினை மெவுத்துக—[illegible]தோரா [illegible]வரு
முக்குணத்தின் சாரவா மூபனா ஞா[illegible]தி லையாமோத
தகருமுறை யோக முடிந்தது

அத்யாயம் 15.

# புருஷோத்தமயோகம்.

மன்னு மசித்தின் மருவியமர் சித்தெனுமா
வுன்னு முயிர்வகையி லுத்தமனை — மன்னியவை
மீதன் பரந்து பரித்திறையாய் மேவினனை
யோதும் பதினைந்தா மோத்து.

மீது முதலாய் மிகுசாகை கீழாக
வோது முலகா முயராசைப் — போதுந்
தளிர்கள் மறையாகத் தானுணர்வா னந்த
வொளிகொண் மறையுணர்ந்தா னுற்று. 1

கீழ்த்தனிலு மேலுங் கிளைகளதுக் குப்பரந்து
தாழ்வில் குணத்துயருஞ் சார்புலன்கள் — சூழ்தளிரா
மூலங்கீ ழும்பாக்கு முன்னை வினைத்தொடர்பாய்
ஞாலத்தின் மேலமர்ந்து நன்கு. 2

இத்தி னுருவு மிதின்முடிவு மாதியுமற்
றத்தி னிருப்பு மறிவார்தாம்—மொய்த்தமர்ந்த
மூலவா சாமிதனை முற்று மறுத்தறவாங்
கோலவலிச சத்திரந்தான கொண்டு. 3

ஆகைதனு லிப்பதந்தா னுராய்தற் காகுமே
லீங்கதனிற் சென்று லினிமீளார்—பாங்கதற்குப்
பற்றுவா னாகப பரனைபெவ னுன்மன்னு
முற்றுமியல் வுண்டா முயன்று.. 4

மானமோ கங்களின்றி மற்றுநசைக் குற்றமற்
றூனவுயிர்த் தன்மையமர்ந் தாசையது—தானகன்றே
யின்பமிகு துன்ப விருமைவிட் டிங்குணர்வோர்
மன்பதமே தாமடைவர் வாய்ந்து. 5

அந்தவுயிர்ச சோதியினை யாதித்தன் சந்திரனுஞ்
செந்தழலுந் தாம்விளக்கஞ் செய்யார்க—ளெந்தவுயிர்
தானடைந்தார் மீளார்க டாம மஃதெனக்கே
யானவகை நீதா னறி. 6

என்னுரு மம்சமா யிவ்வுலகிற் சீவனாய்
முன்னா நின்று முயலுமுயிர்—தன்னுரு
மைம்புலனு நெஞ்சு மவையாறை யும்வலிக்கும்
வெம்புலத்துச் சேர விரைந்து. 7

எந்தவுடல் விட்டெவ் வுடலடையு மீசனவன்
சந்தமுட னங்கிவற்றைத் தான்வாங்கிப்—பந்தமுடன்
றானேகும் வாயுத்தன் சார்மணங்கள் வாங்கியே
பூநேர்ந்தின் றேகுமது போல். 8

செவிகண் மெய்க்குடன் சிங்குவைநா சிசேர்ந்
தவிரின்றி நெஞ்சோ டமர்ந்து—நவிவில்லாய்
புன்பொருள்க ளெல்லாம் புசித்தியலு மிவ்வுயிர்தா
னின்புறுதல் சேர்நசையா லிங்கு. 9

இந்தவுடல் விட்டேக லெய்ந்து மிதிலிருந்தும்
வந்துபுசித் துங்குணத்தின் மன்னியவனை—வந்தறிவின்
மூட ருணரா முகையறியார் முற்றுணர்வர்
நாட வுணர்வுழியார் நன்கு. 10

மன்னுகரு மத்து மருவியல் யோகியர்க [ளுணரு
டன்னுடம்பின் மேவியவனைச் சார்ந்துணர்வார்—முன்
னெஞ்சமில் லாதார் நிறைவின்றித் தாமுணரா
ரெஞ்ச லறவியன்று மிங்கு. 11

ஆதித்தன் பானின் றனைத்துலகுந் தான்விளக்குஞ்
சோதிச் சுடர்சோமன் சூழங்கி—மீதிலகி
மன்னுமொழி தன்னின் வனப்பதுவு மன்னனே
யென்னதென வுற்றறிநீ யெய்ந்து. 12

பூதலத்தின் மேவியே பூதங்க ளூன்றிப்பன்
மீதடர்த்து நின்ற மிகுமிடுக்காற்—சீதளஞ்சேர்
சோமனென நின்றமுதஞ் சோர்ந்தே பயிரெல்லாஞ்
சேம முறநிறைப்பன் சேர்ந்து. 13

நானமர்ந்து நின்றுலகி னூடு முயிருடலி
லூன மறவளரு மொள்ளொளியாத்—தான்கலவா
வேல்வகைசேர் வாயு விரண்டா லறப்புசிப்ப
னெல்வகைசே ரன்னத்தை நன்கு. 14

எல்லா ரிதயத் திருப்பேனு னென்னாலே
நல்லார் நினைவறிவு நாட்டமாஞ்—சொல்லார்ந்த
வேதங்கள் யாவைக்கும் வேத்தியனுன் மேவுபயன்
றீதந் ததுவறிவேன் றிக்கு. 15

கண்ணு ருலகிற் கரனக் கரனென்றே
யெண்ணும் புருட ரிவரிருவர்—பண்ணும்
பூதவுயி ரெல்லாங் கரனும் பொருவில்சீர்
மீதவுயி ரக்கரனும் வேறு. 16

ஆமிவரி லுத்தமனே யாம்புருட னன்னியனுய்ப்
பாமகிற் பரமான்மா வென்றுரைத்தா—னோங்கியே
தாம்புகுந்து நின்றே தரித்துலக மூன்றிறையா
யோம்புமவன் குன்றுத மேல். 17

எத்தகவால் யான்கடன்மீ தேகியே யக்கரனு
முத்தனிலு முத்தமனு வுற்றுயர்ந்தே—னித்தகவால்
வேத முலகிவற்றின் மேவுபுரு டோத்தமனென்
றோத வுறைசிறந்தே னுற்று 18

என்னையிங்கே யிவ்வண்ண மெய்ந்தபுரு டோத்தமனு
முன்னை யமர்வொழித்து முற்றுணர்ந்தான்—பின்னை
எல்லா மறிந்தே யெனையடைந்து பத்தியுடன் [யவன்
செல்வானெய் யாறுஞ் சிறந்து. 19

இன்னேயிச் சாத்திர மாயேய்ந்த மறைப்பொருளை
மன்னே யுரைத்தேனுன் மற்றிதனை—நன்னெறியா
லுற்றறிந்தா னேமே யுணர்ந்தானும் பார்த்தனே
மற்றனைத்துஞ் செய்தவனும் வாய்ந்து. 20

எனும் புருடோத்த தமனை வேறறத்தைச்
சால விறைவனே தானுரைத்த—மேலான
கீதை பதினைந்தா மோத்துக் கெழுமிகுசீர்ப்
போதப் பொருளுரைத்தோம் பூண்டு

# தெய்வாஸுர ஸம்பத் விபாகயோகம்.

## அத்யாயம் 16.

*தன்மையாற் றேவ ரசுரரென்னச் சார்பிறவு*
*ரன்மைசேர் சாத்திரத்தி னைத்துநூ —றொன்மைக்*
*கரைக்கந் தறிவுரைப்புக் காட்டுதற்குக் கீதை*
*புரைக்கும் பதினாறு மோத்து.*

அஞ்சாமை நெஞ்சுதெளி வாய்ந்தறிவாம் யோகநிலை
யெஞ்சாத தான மிசைந்ததமந்—தஞ்சாத
வெச்ச மறையுரைத்த வேலலுந் தவமுயற்றி
நிச்சந் தனிற்செவ்வை நேர்ந்து. 1

கொல்லாமை மெய்ம்மை வெகுளாமை கோள்விடுத
றொல்லார் சமங்குறளைச் சொல்லாமை—எல்லாத்து
மேவுதயை தான்சலிப்பு மேவாமை மென்மைநாண்
பாவுபொருட் சாபலந்தீர் பண்பு. 2

தேசு பொறைதிண்மை தூய்மை சினமறுதன்
மாசு நிகழ்மிசைசேர் மானமொழி—வாசலிவை
தெய்வமெனுஞ்சம்பதத்திற்சேர்ந்துபிறந்தார்க்குண்டோ
மெய்வகையார் பார்த்தனே மிக்கு. 3

தன்மமி லாடம்பந் தன்செருக்குத் தன்மானம்
வன்மையுறு செற்றம் வளர்கொடுமை—நன்மை
யறியாமை பார்த்தனே யாசுரமாஞ் செல்வஞ்
செறிவாருக் குண்டாந் திறம். 4

தெய்வமெனுஞ் செல்வந் திகழ்மோக்கத் தாசுரந்தா
னேவகைசார் பந்தத்து நாடுறப்பா—மிவ்வகையார்
சேர்ந்துயர்ந்த சீர்ப்பார்த்தா தெய்வமாஞ் சம்பத்தை
நேர்ந்துதித்தாய் சோகியே னீ. 5

பூத மிருவகையாய்ப் போருமே யிவ்வுலகி
லாதமருந் தெய்வமாங் காசுரமா—மீததனிற்
றெய்வம் விரித்துரைத்தேன் சேர்ந்துநீ யாசுரத்தை
மெய்வகைகேள் பார்த்தா விரித்து. 6

செய்கின்ற வில்லறமுஞ் செய்யாத் துறவறமு
நைகின்ற வாசுரர்க ணன்கறியார்—மெய்குன்றுந்
தூய்மையுட னாசாரஞ் சொல்லின் பயனுய
வாய்மையுமற் றில்லையவர் மாட்டு. 7

இசசகத்து மெய்யன் றிதற்கோர் நிலையில்லை
மிச்சவிறை யில்லென்று மேல்விழுந்து—பிச்சுரைப்பார்
தன்னிற்றான் காமத்தாற் சார்ந்தே பிறக்குமதென்
றென்னிற்றான் மற்றே தெனல். 8

இங்கிதுவே கண்ணுக வேவேற்றுத் தன்னறியா
தங்கியலும் புத்தி யறவறமாய்ப்—பொங்கு
கொடுந்தொழில ராகிக் குலவுலகைத் தீம்பா
லடுந்தொழில ராவா ரவர். 9

கிட்டாத காமத்தை யுன்னியது கிட்டும்வினைப்
பட்டாங் கறிவின்றிப் பாவத்தா—லிட்டபொருள்
வாங்கிமத டம்பஞ்சேர் மானமுட னிங்குழல்வார்
தீங்கியன்று மல்விரதஞ் சேர்ந்து. 10

தூங்கவள வில்லாதே தோற்றஞ்சேர் சிந்தையினைத்
தங்கண் முடிவளவுந் தாமருவி—யங்கமருங்
காமபோ கம்பரமாக் கண்டறுதி மேவுவரே
யேமமிது வல்லதிலை யென்று. 11

காமஞ்சே ராக்கை சதங்களாற் கட்டுண்டு
காமக் குரோதத்துக் கைவளர்ந்து—சேமமுட
னூக்கதனைத் துய்ப்ப ரனியாய வத்தத்தை
யோங்கிமிகத் தாஞ்சேர்ப்ப ருற்று. 12

இதுபெற்றே னிப்போ திதயா னினைந்த
திதுகிட்டு வன்மேலு மின்னே—யிதுவென்ன
தாயேயுண் டாகின்ற தாங்கதற்பி னித்தனமு
மேயேயுண் டாமெனக்கு மிக்கு. 13

இப்பகைவன் பட்டான்மற் றியாவரையுங்கொல்வேனான்
செப்பமிறைநான்போகிசித்தனான்—மெய்ப்பொருளோ
மேவுவலி யோன்சுகிநான் மேற்குலநா னாகின்றே [ன்
னேவனென்னோ டொப்பான்மற் றிங்கு. 14

நானே யெசிப்பேன் கொடுப்பே னனியுகப்பேன்
றானே யெனமோகஞ் சார்ந்தவர்க—ளாநெஞ்
சோடியே மோகித் துறுங்காமத் தார்நரகிற்
கூடியே வீழ்வர் கொலைந்து. 15

தம்மைத்தாஞ் சம்மதிப்பார் தாமுயலார் தம்பித்துச்
செம்மைத் தனமானஞ் சேர்செருக்கா—லிம்மைக்கே
நாமவினை யால்யசிப்பார் நாட்டியலும் டம்பத்தாற்
சேமவிதி சேராது சென்று. 16

ஆங்காரம் வன்மை யதன்செருக்குக் காமமுடன்
தீங்கார் குரோதமது சேர்ந்தவர்—பாங்காரத்
தம்பிறர்க டேகத்துச் சார்ந்தவெனைத் தான்வெறுப்பார்
வெம்பியகூளையச்சுடரால் வெந்து. 17

ஆங்கென்னைத் தான்வெறுத்த வந்த நராதமரை
யீங்குழலு மிப்பவத்தி லென்றுநான்—நீங்குழலு
மாசுரமாம் யோனி யவைதன் னிடையெய்த
மாசுறவே தள்ளுவேன் மற்று. 18

உற்றுநிகழ்ந் தாசுரமாம் யோனிகளிற் பல்பிறப்பில்
முற்றுமறி வின்றியே மூடராய்க்—கொற்றவனே
யென்னை யடையாதே யீங்கதனிற் றாழ்ந்தகதி
தன்னடைவ ரென்றுந் தளர்ந்து. 19

மாநரகின் வாசலாய் மன்னுமிவை மூன்றுயிருக்
கீனமா நாச மியற்றுமவை—தான மருங்
காமங் குரோத முலோபங் கடிதியற்றி
னாமஞ் செறுநீ நவிற்று. 20

இந்த வறிவுகேட்டுக் கிம்மூன்றும் வாசலென
வங்கறிந்து விட்டோ னரசனே—சங்கையறத்
தன்னன்மை யாசரிக்கத் தன்மைப் பரகதியா
மிந்நன்மை சேரு மெழுந்து. 21

விட்டமருஞ் சாத்திரத்தின் மேய விதியையெவ
னிட்டமிகத் தள்ளு வியல்கின்றான்—றட்டறுசீர்ச்
சித்தியது சேர்ந்தடையான் சேரான் சுகம்பரமா
முத்தியது சாரான் முதிர்ந்து. 22

மன்னிச் செயுமதுவு மற்றதுவு முற்றறிவு
தன்னிற் பிரமாணஞ் சாத்திரமே—யென்னுமதா
லந்த விதான மறிந்தே கருமத்தை
முந்த வியனி முயன்று. 23

இப்படியே தேவா சுரமா மியல்வதனைத்
தப்பறுசீர் ஞானத் தகுநிலைமைக்—கொப்பாப்
பகவற்சீர்க் கீதைப் பதினாறா மோத்தில்
நிகழ்ந்தபொருளை முற்றியது நோக்கு.

# சிரத்தாத்ரய விபாகயோகம்.

## அத்யாயம் 17.

ஆசாமாங் காணமை சாத்திரந்தான் சாத்திரத்தி ற
றேசடைய கன்மரு செறிகுணத்தா ற—போசநெறி
சோர்ந்தேயிம் முக்குணங்கள் செப்புமே மூவகையா
வோராதே பதினேழா மோத்து.

மேவியசீர்ப் பார்த்தன் வினவுரைத்தான் கண்ணனே
பாவியசீர்ச் சாத்திரத்தின் பாங்கொழிந்திங்—கோவா
விருப்பற் றியல்வார்க்கு மிக்ககுண மூன்றி
விருப்பே தினியுரையா யிங்கு. 1

ஐயனவ னுக்காங் கறிய வுரைசெய்தான்
செய்ய கருமச் சிரத்தைதான்—மெய்யமருந்
தன்மையான் முக்குணத்தின் சார்வாகு மூவகையாம்
பன்மைநீ கேளாய் பயின்று. 2

நீடுலகி லெல்லார்க்கு நெஞ்சுக் கனுகுணமாப்
பாடுபெறு மிந்தப் பருஞ்சிரத்தை—நாடுஞ்
சிரத்தையுரு வாம்புருடன் சேர்ந்தே சிரத்தை
யுரைத்ததெவற் காங்கவனு முற்று. 3

சத்துவத்தர் சார்வமரர் தாமியக்க ரோடரக்கர்
மத்தியத்தர் சேரும் வகையதுதான்—புத்திசெறு
புன்மைத் தமோகுணத்தர் பூதம் பிரேதகணந்
தன்னைச் சமைந்தனைவர் தாம. 4

கோரமாய்ச் சாத்திரத்திற் கூறாத் தவந்தன்னைச்
சேரவே யாரியல்வால் டம்பமுடன்—ஈரமிலா
வாங்காரங் கூடி யதிகாம ராகங்கள்
தீங்காகுந் திண்மைசெறிந்து. 5

உற்றவுடற் பூதங்க டன்னை யொருநின்றே
மற்றதனுண் மேவுயிராய் மன்னெனையும்—பற்றற்
றறவருந்து விப்பரவ ராசுரமாம் புத்தி
மறவ ரெனநினை நீ மற்று. 6

எவர்க்குந் தானுகப்பா மூணெச்ச மேய்ந்தவ
மேவத் தருதானம் வேறுபடப்—பாவுங்
குணந்தன்னுன் மூவகையாக் கூறியவப் பேத
முணர்ந்திங்கே கேளிதனை யுற்று. 7

வாழ்நாண் மனந்தெளிவு மன்னுவலி நோயாமை
பூணுஞ் சுகமுவப்பைப் போதருவித்து — மாணார்ந்த
தித்தித்து நெய்த்துத் திரமாய் மனோகரமா
யொத்திடுமே முற்குணத்தி னூண். 8

[தா
காழ்த்துப் புளித்துப்பாய்க் கைக்கொதித்துத் தான்கடு
யாழ்ச்சிக் கொடிதா யழல்விளைத்து — மூழ்ச்சியினிற்
றுக்கஞ்சோ கம்பிணியைச் சூழ்க்கு நடுக்குணத்தி
றெக்க வுகந்துண்ணு மூண். 9

காலங் கழிந்து கழிந்திரதந் தூர்கெந்தித்
தேல மிகப்பழகி யெச்சிலாய்ச் — சாலப்
படைத்தமுதுக் காகாத பாயச்சோ ருகுந்
கடைக்குணத்தா னுண்ணுங் கணக்கு. 10

வேண்டா ததிற்பயனை வேதவிதி மேவிமனம்
பூண்டா ரியல்யாகப் புந்தித்து — மூண்டாங்கு
தாமியல்வ தெச்சந் தகவான் முதற்குணத்தி
லாமெனவே கொள்க வறிந்து. 11

சேர்ந்த பயனினைந்தும் டம்பம் பொருட்டாயுஞ்
சார்ந்த தெதுபரதர் தந்தலைவா — கூர்ந்த
மனத்தாலவ் வெச்சத்தை வாய்ந்தறிநீ யந்த
வினைத்தா விடைக்குணத்த தென்று. 12

விதியற் றவியற்று மந்திரமும் விட்டே
யதின்மேவு தக்கணையு மற்றுக் கதிசேர்ந்த
வேளுஞ் சிரத்தையிலா வெஃசங் கடைக்குணத்தாற்
கோலு மெனவுரைப்பர் கூர்ந்து. 13

காயஞ் சொலவுமனங் காட்டுந் தவங்களவை
மேய குணங்கண் மிகுநெறியா—லாயவெனின்
மூன்றதனி னின்று முயலும் படியுரைக்க
வென்றதனைக் கேளீ யினி. 14

தேவர் மறையோர் குருக்கண் மிகவுணர்ந்தோர்
மேவ வருச்சித்தன் மெய்தூய்மை—யோவாத
செவ்வை மகளிரிடைச் செல்லாமை கொல்லாமை
யிவ்வகைகா யத்தவமா மிங்கு. 15

அஞ்சா வகைசொல் லதன்மெய் யுகப்பிதமாத்
துஞ்சா மறையின் சொலின்வலியா—லெஞ்சாத
வாக்கதனி னின்றும் மருவுதவ மென்பரே
யூக்க மனமுடையோ ருற்று. 16

மனந்தெளித னன்கறிதல் வாயுரையை நீட்ட
னினைவுமனஞ் சேர நிறுத்த—லினமியல்வு
சேராத தூய்மையிவை சித்தத்துச் சேர்தவமென்
றோராய்வர் ஞானத் தவர். 17

முக்கரணஞ் செய்தவங்கண் மூன்றுவித மார்வமுயர்ந்
தொக்க வருபயனை யுள்ளொழித்துத்—தக்கவர்கள்
செய்யுந் தவத்தைச் சிறக்கின்ற முற்குணத்தென்
றுய்யு மவருரைப்ப ருற்று. 18

நாடு நலநினைந்து கொண்டாடி நன்கிறைஞ்சத்
தேடு மனநினைந்து டம்பத்தாற்—நீடுறவே
யேய்ந்ததவ நில்லா திடைக்குணத்த தாய்ச்சலித்து
மாய்ந்தறுமென் றேயுரைப்பர் மற்று. 19

மூட மதியான் முயல்வுற்றுத் தம்முயிர்தான்
நீடை மருவப் பிறர்கேடு—கூடவே
யுற்றதவ மான துடனே கடைக்குணத்தைப்
பற்றவரு மென்பர் பயின்று. 20

வேறுப கார்த்தை வரும்பா தியல்வென்று
கூறிடங் காலநலங் கொள்பவனைத்—தேறியே
தான்கொடுக்குந் தானந்தான் சத்துவத்தி னின்றுமேல்
வான்கொடுக்கு மென்பர் மதித்து. 21

மீண்டுபகா ரங்கொளவும் வேறுபல மிச்சிதத்தும்
பூண்டு மிகவருந்திப் புன்பொருள்கள்—வேண்டுநெறி
யிட்டியலுந் தான மிடைக்குணத்தின் பாங்கதனிற்
பட்டியலு மென்பர் பலர். 22

தேசகா லஞ்சிறப்புச் சிந்தியா தேற்பவன்பா
லாசின்மை பாரா தவமதித்து—நேசஞ்செய்
யாதரிப்ப தில்லாத வத்தானம் பிற்குணத்தை
மீதரிப்ப தென்றுரைப்பர் மிக்கு. 23

ஓந்தற் சத்தென்னு முறைமுயன்று மொண்மறையாய்
வாய்ந்த பிரமத்தின் மன்னியவ—ரேய்ந்திவ்
விலக்கணத்தா லந்தணர்கள் வேதங்க ளெச்சங்
கலக்க மறவுண்டான் காண். 24

ஆசலா லோமென் றமர்ந்துரைத்தே யந்தணர்க்கு
வேதநின் றோதும் விதிவகையே—போதமுட
னெச்சந்தா னந்தவங்க ளெல்லாமெக் காலத்து
மிச்சந்தன் னுண்டாக்கு மேல். 25

நெஞ்சாற் பலத்தை நினையாதெச் சந்தானந்
துஞ்சாத் தவமுத்தி தொன்மைநினைந்—தெஞ்சாம
லொத்தங் கியலு முயர்ந்த தெனச்சொல்லு
மெத்தென் றுரைக்குந் தரம். 26

உண்மையிலு நன்றான வொண்மையிலுஞ்சத்தென்னும்
வண்மையுரைதன்னைமதித் துரைப்பர்—திண்மையுயர்ந்
தேலுங் கருமத்தைச் சற்கரும மென்றுரைப்பர்
மாலும் புகழ்விசையா வாய்ந்து. 27

ஆங்கதனு லெச்சந் தவந்தான மாமிவற்றி
லோங்கமருந் தன்னிலையு முற்றவற்றிற்— பாங்கியலுஞ்
சத்தென் றுரைக்கத் தகுமென்ற வேதியர்க
ளொத்தென் றுரைப்ப ருகந்து. 28

தான்விருப்ப மின்றிச்செய் தானந் தவமோமம
மான்விருப்பத் தேற வழியாகா—வான்விருப்பாக்
காயத்தி னன்றாகாக் காரணத்தா ரன்சத்தாய்
மாயக் கறுவிக்கு மற்று. 29

மேவு குணமூன்றால் வேறாய கருமங்கள்
பாவு சுருதிப் பயில்வகையே—சேவையுறும்
பாங்குரைத்த கீதைப் பதினேழா மோத்தினை
நீங்குரைத்தே னிப்பொருளா லேய்ந்து.

# மோக்ஷோபதேச யோகம்.

## அத்யாயம் 18.

*செயகரும நீசனே காத்தலாச் சிந்திப்பு*
*மெய்கருதுஞ் சத்துவத்தின் மெய்ப்பாடு—மையகருவுஞ்*
*சாருவ கதியுமிச் சாரத்தின் சாரமுமுற்*
*றோரும் பதினெட்டா மோத்து.*

*சன்யாசங் கன்மத்திற் சாருந் தியாகத்தில்*
*முன்யான் பிறிவொருமை முற்றறியேன்—பின்பின்யான்*
*தோன்றாது நீயிதனைச் சொல்லென்றான் பார்த்தனதற்*
*கேன்றங் குரைத்தா னிறை.* 1

*காமக் கருமங்கள் கைவிடுதல் சன்னியாசம்*
*சேமத்த தென்று சிலருரைப்பர்—ஏமத்தா*
*லெக்கருமப் பேறு மிகழ்வு தியாகமெனச்*
*சிக்கெனவே சொல்வர் சிலர்.* 2

ஏதம்போற் கன்ம மிகழப் படுமென்று
போதர் சிலருரைப்பர் புந்தியான்—மீதென்று
மெச்சந் தவந்தான மீங்கிகழ்வ தல்லவென
நிச்சஞ் சிலருரைப்பர் நின்று. 3

அந்தத் தியாகத் துறுதியினை யென்பார்கேள்
சந்ததிகள் பாரதர்க டந்தலைவா—முந்துறவே
யான்பகர்ந்தேன் மூன்றுவகை யென்றே தியாகத்தைத்
தான்பயனைச் சங்கந் தவிர்ந்து.

பாவியச் செச்சம் பயிலுந் தவந்தான
மேவியக ழாதென்று முற்றியல— மேவினவை
யாவின்பா லாங்கவைதா ஞான வறிவினர்க்கும்
பாவனமா மென்றும் பயின்று. 5

இக்கரும மான வினையென் கருமமென
நிக்கமருஞ் சங்க மிகுபயன்க—ளொக்கவிடுத்
தேய்ந்தவியல் வென்றே பியலுமதே யென்றனக்கிங்
காய்ந்த வுறுதிமிக வாம். 6

என்று நியதமா மிந்தக் கருமங்க
ளொன்றும்விட விவலுக்கொண்ணுதா—னின்றிவற்றை
மோகத்தாற் றுன்விடுதன் முக்குணத்திற் பிற்குணத்தி
லாகத்தால் வந்த வது. 7

செய்யுவ கருமமெல்லாஞ் சிந்திக்க நீவிசையா
வுய்யு மதியறிதி புற்றுணர்ந்து—வைவகைசேர்
காரணங்க ளென்பாற் கருத்தமர்ந்து கேட்டறிநீ
யாரணங்கள் சொல்லு மது. 13

நிற்க நிலை யாகுமுட னேர்ந்தவுயி ராங்கர்த்தா
வற்குமிழற் செய்கரண மற்றவைதா—னெற்கமிலாச்
சேட்டைபல பஞ்சமமாந் தெய்வமிறை தன்மத்துக்
கூட்டமாவ தாகவே கொள். 14

காயத்தால் வாக்காற் கருது மனத்தனல்
மாயத்தான் செய்ய மருவிமுயல்—னேயத்தால்
நல்வினைக்குத் தீவினைக்கு நாட்டி விவையைந்துஞ்
செல்வினையி லேதுவாஞ் சேர்ந்து. 15

இவ்வகையா லைந்தாற் காத்தாவா லெவ்வுயிரிற்
செவ்வையதி யாதுவெறுஞ் சீவனே—யெவ்வகையிற்
கர்த்தாவா மென்னவே காண்கின்ற துன் மதிதா
னொத்தாரும் புத்தி புரான். 16

நான்செய்தே னென்று நடக்கு மனமின்றித்
தான்சேர் பயனதனிற் சார்வற்றான்—றான்சேரு
மிவ்வுலகைக் கொன்று மிவன்கொல்லான் கட்டுண்ணா
னவ்வினையிற் சேரா னவன். 17

அறிவாங் சறியப் படுங்கன்ம மத்தை
யறிவான் விதிமூன்றே டாகுஞ்—செறிவார்
கரணஞ்செய் கன்மமதிற் கர்த்தாவா மூன்றாங்
காரணஞ்செய் கன்மத் தடைவு. 18

காணுணர்வுங் கன்மமுங் கர்த்தாவு மும்மூன்றாய்ப்
பேணுங் குணத்திற் பிரியுமதன்—றேணுறவே
யக்குணஞ்சேர் தன்மை யறவுரைப்ப னாங்கதனை
நிக்குணர்ந்து மன்னுகேள் வேறு. 19

வண்ணச் சரம வகைசேருஞ் ஞானத்துங்
கண்ணே ருயிரொருமைக் காட்சியாற்—றிண்ணா
வேறறவே நோக்குமறிவைச் சத்துவத்திற்
சேரறிவா மென்றே தெளி. 20

வேறுபடு பூதங்கண் மேவுயிரும் வெவ்வேறாய்க்
கூறு படும்வகையிற் கூடுமெனத்—தேறு
மறிவை யிடைக்குணத்தி லாகியவ் வண்ணஞ்
செறிவதென வேயறிநீ தேர்ந்து. 21

ஏதேனு மோர்கருமத் தெல்லாம் பெறலாமென்
றோதே நசைபண்ணி யற்பமாய்—மீதேயோர்
மெய்ம்மை யடையா வெறுமறிவு மிற்குணத்திற்
பொய்ம்மை புனையும் புணர்ந்து. 22

உகப்புவெறுப் பன்றி யுயர்கசையு மற்றே
ரிகத்தனியல் வாமென்று மேவி—யகப்பயனி
லாசைமொழிந் தாங்கியலு மக்கரும முற்குணத்திற்
பேசவரு மேலுயர்த்தி பெற்று. 23

காமநசை தன்னு லகங்கார்க் காழ்ப்பினிற்
றுமருவு மாயாசந் தான்மிக்குச்—சேமமென
நின்றியலு மக்கரும நேர்ந்தே யிடைக்குணத்திற்
சென்றியலு மென்றுரைப்பர் தேர்ந்து. 24

தூக்கத் தொடர்சசி பொருணசைஞ் சூழ்பீடை
யொக்க வியல்வலிதா னொன்றினையுங்—தக்கறியான்
மோகத்தாற் செய்கரும முண்டேற் கடைக்குணத்தின்
மேகத்தா லாகுமே மிக்கு. 25

ஆர்ந்தபய னைசை யதுவிட் டகங்காரந்
தீர்ந்திட னும்முயற்றி சென்றியன்று—சேர்ந்துவரும்
பேரிழவில் வேறுபடாப் பீடுடைய கர்த்தாவாம்
வீறியலுஞ் சத்துவத்தான் மிக்கு. 26

புகழ்விரும்பிப் புன்பயனை வேண்டிப் பொருளை
யிகவவ்விப் பீடையினை மேவித்—தகவென்னுஞ்
சுத்தியுறு துட்களிப்புச் சோகத் துறுங்கர்த்தா
மத்திய மாங்குணத்தான் மற்று. 27

நன்மைத் தகாணறிவு நண்ணான் முயற்றியுறான்
வன்மைசெ சடன்மறத்தின் மன்னுவான்—புன்மைசேர்
மந்தன்சோம் பன்னெடுகை லாதைநினை யுங்கர்த்தா
சந்தத்தாற் றாமதனாந் தான். 28

புந்தியிலுந் திண்மையிலும் பூணுங் குணப்பிரிவால்
வந்திவைதான் மூன்றாம் வகையதனைச்—சிந்தைசூழ்ந்
தெல்லாம் பிரிவறிய யானியம்பக் கேளிதனை
நல்லாய் தனஞ்செயனே நன்கு. 29

துக்க மியல்றமு மல்லறமுங் காரியமு
மிக்க வகாரியமு மேலச்சந்—தக்கவரு
மஞ்சாமை பந்தம்வீ டான்றறியும் புந்திதா
னெஞ்சா முதற்குணத்தா லிங்கு. 30

தன்மமு மற்றைய தன்மமுங் காரியமும்
புன்மைய காரியமும் போக்குத்தா—நன்மையுறக்
காணும் வகையன்றிக் காணலுறும் புத்திதான்
பேணு மிடைக்குணத்தைப் பேர்ந்து. 31

மேவுபொரு ளெல்லாம் விபரீத மாகவே
தாவுமிருள் சேர்ந்து தனஞ்செயனே—யாவதென
வொன்று மதன்மத்தை வேறுணரும் புத்திதான்
சென்று கடைக்குணத்தாஞ் சேர்ந்து. 32

உண்மையினு னெஞ்சை யுயிர்புலன்க ளூற்றசெயல்
வண்மையறி யோகத்து மன்னியவருந் திண்மையினு
லுற்றே தரிக்கு முயர்திருதி பார்த்தனே
யற்றே முதற்குணத்த தாம். 33

தன்மகா மார்த்தங்க டன்னையே யாதினுற்
புன்மைசேர் தன்பயனுற் புந்தித்து—வன்மைசேர்
சங்க முடனே தரிக்கின்ற னத்திருதி
யங்க விடைக்குணத்த தாம். 34

மன்னு முறக்கம் பயஞ்சோகம வாட்டமதந்
துன்னுமிவை யித்தனையுந் துன்மதியான்—மன்னி
யிடைவிடா தேமருவு மித்திருதி பார்த்தா
கடையிலா குங்குணத்தின் காழ்ப்பு. 35

தானமர்ந்து சேர்சுகந்தான் றன்குணத்தான் மூன்றுவ
யானபடி கேணீ யமர்விசையா—லூனமற | கை
மிக்கதனிற் சீலத்தான் மெய்யே யுகப்பெய்தித்
துக்கமுடி வுஞ்செறியுஞ் சூழ்ந்து. 16

எது முதல்விடம்போ லின்னுது பின்னதுதான்
மீது வளர்ந்தமுத மேயொக்கு—மோதுமுயிர்ப்
புந்தித் தெளிவுதரும் பொற்பார் சுகமதுதான்
முந்தித் திகழ்குணத்தின் மொய்ம்பு. 37

மூளும் பொறிபுலனுன் முன்னமுதம் போலாகி
மீளும் பொழுதில் விடம்போலே—நாளுங்
கொடுநிரையத் தேவீழ்க்கக் கூட்டுஞ் சுகந்தா
னடுத்திகழு மக்குணத்தி னட்பு. 38

தோன்றுழியிற் றுய்ப்பிற் றுளங்கா வுயிர்மயக்கி
யூன்றுறக்க முண்மடிவோர்ப் பின்மையா—லேன்றுவரு
மோகச் சுகமதுதா்ன் முக்குணத்திற் பிற்குணத்த
தாகப் புகன்று ரறிந்த 39

பூமிமிசை மானிடரிற் பொன்னுலகின் மன்னுவா
னமிமையோர் தம்மி லமர்ந்தொருவர்—தாமியலு
முன்னைப் பிரகிருதி மூளுந்த முக்குணங்க
டன்னைப் பிரிந்ததிலைத் தான். 40

மாமறையோர் மன்னவர்கள் வைசியர்கள் சூத்திரர்க
ளாமனிசர்க் காகி யமர்தருமே—தாமருவுந்
தன்மை யமர்குணத்தின் சார்வுடனே வேறுபடு
நன்மை யமரு நயந்து. 41

சமந்தமஞ் சார்ந்த தவந்தன் னமர்ந்தசுத்தி
நமர்ந்த பொறைசெவ்வை ஞான—மமர்ந்த
விறையையறி வுண்மையுணர் விக்கரும மாகு
மறையவர்தந் தன்மை மதர். 42

சௌரியமு மிக்கொளியுந் தற்றுணிவுந் தன்சமத்தும்
வைரியமர் நாணமை வாய்ந்தகொடை—சீரியனு
மொக்கரிய மிக்குமது போர்க்கரசர் தந்தன்மை
தக்க கருமமாஞ் சார்ந்து. 43

காமண் விளைப்பதுவுங் காலியவை காப்பதுவும்
வாணியமும் வைசியர்க்கு வாய்த்ததொழில்—பேணியவர்
மூவர்க்கு மாளாய் முயலுமதே சூத்திரர்க்கு
மேவப் படுந்தொழிலா மிக்கு. 44

தந்தங் கருமத்துச் சார்ந்தே தருமபயன்
வந்தடைய லாகு மனிசர்க்குச்—சந்தமுடன்
றன்கரும நின்றொருவன் றன்சித்திச் சார்வதனை
நன்கமாக் கேளினி நயந்து. 45

எவன்பாற் பூதங்க ளெல்லாம் பிறந்தியலு
மேவன்று னிங்க ளிடைப்பரம்பு—மேவியே
யாங்கவனைத் தன்கருமத் தாலே யருச்சித்தே
யோங்கவவன் சித்தி யுறும். 46

தன்கரும மல்குணத்தைச் சார்ந்திடினு மிக்கியன்ற
வன்கரும மானவது மற்றொன்றி—னன்கதுவாந்
தன்மைசேர் கன்மத்துத் தக்கியல்வான் சார்துயரட
புன்மைசா ரான்போய்ப் புறத்து. 47

கூடப் பிறந்த கருமங் குறையுறினும்
வீடப் படாது விகல்விசையா—பீடுற்ற
வெல்லா முயற்சியையு மேய்ந்தெரியத் தூமம்போற்
பொல்லாங்கு சூழும் புகுந்து. 48

எங்குந் துவக்கின்றி யேயுமனஞ் செயித்துப்
பொங்கு நசையில்லாப் போதத்தா—னங்குத்
தனையமர் சன்னியாசஞ் சார்வதனான் மேவும்
வினையகன்ற மேலாம் வியப்பு. 49

செவ்வியுறுந் த்யானத்தின் சித்தியினைச் சேர்ந்தவனெ
வ்வாறு தான்பிரம மெய்துவ—னவ்வாறு
சேர்ந்த வதினிலையாஞ் சித்தி யதுசுருக்க
லார்ந்தெனது பானீ யறி. 50

கோதறுசீர்ப் புத்தியுடன் கூடித்தன் றிண்மையான்
மீதியலு நெஞ்சை நிகவடக்கித்—தீதமரு
மோசை முதற்பொருள்க ளுள்ளுறவிட் டொன்றிவரு
மாசை வெறுப்பவையு மற்று. 51

தக்கதனி யாமிடத்துச் சார்ந்தறிவு தான்சிறிதுண்
டொக்கவுரை காயநெஞ் சுள்ளொடுக்கி—மிக்கமர்ந்தே
யென்றுந் தியானமாம் யோகஞ்சேர்ந் தெவ்விடத்து
மொன்று நசைவிடுத லுற்று. 52

ஆங்காரம் வன்மை யதிற்செருக்குக் காமமுடன்
றீங்கார் வெகுளிதான் சேர்சுற்றந்—தேங்காது
நீந்து மமதை நெகிழ்ந்தே நிகழ்சாந்தி
னாய்ந்தபிர மத்தனும் வந்து. 53

தொன்மைப் பிரமவுயிர் தோன்றமன நிற்றெளிந்து
புன்மைப் பலசோகம் பூணைசையின்—றன்மையவித்
தெப்பொருட்கு மொத்தென் பாலேய்ந்தபரா பத்தியினைத்
தப்பறவே சேருஞ் சமைந்து. 54

என்னுருவேன் மற் றெவ்வளவி னுண்மையிரு
வாவுறுமெ னென்னை யறிவனுதான்—மேவநிகழ்
பத்தியான் மெய்யுணர்ந்தே பண்பா லெனைப்பின்னை
முத்தியால் வந்தடையு முற்று. 55

பற்றிக் கருமங்க ளெல்லா மருவியெனைப்
பற்றிப் பயின்றென்றும் பார்த்தியல்வா—னற்றமற
மேவு மெனதருளால் மிக்கடையு மற்சமற
மோவுதலி லாப்பதத்தை யுற்று. 56

நெஞ்சாற் கருமமெல்லா நேராக வென்னிடைவைத்
தெஞ்சாம லெற்பரனா யென்னாளுந்—துஞ்சாத
புத்தியோ கத்தைப் புணர்ந்து பொருவிலென்றன்
பத்தியோ கம்பெறநீ பார்த்த. 57

என்னை நினைந்தநீ யென்றுமித் துற்கங்க
டன்னிகிரி தென்னருளாற் றாண்கடத்தி—பின்னிதனை
யாங்காரத் தாலே யமர்ந்துநீ கேளாயேற்
றுங்காதிய கேநசித்தி தான். 58

ஓங்குமகங் காரத்தி லூற்றே யுயர்சமர
மீங்குமுய லேனென் றிருத்தியே—லாங்குநிறை
மேவுந் துணிவதுவு மெய்யன்று தன்மையுனை
யேவுஞ் சமரத்தி லேய்ந்து. 59

தன்மையமர் தன்கருமந் தன்றாற் பிணிப்புண்டு
நன்மை யமர்ந்தவமர் நாணிநீ—யுன்மருவு
மோகத்தால் மீண்டிடினு மூண்டே யவசனாய்
வேகத்தாற் செய்வுதிநீ யிக்கு. 60

ஈச னவனொருவ னெல்லா ரிதையமாந்
தேச மதினிற்குஞ் சீர்விசையா—பாசமுட
னெல்லா வுயிர்களையு மாயையினு லேதிரிக்க
வல்லா னியந்திரத்தில் வைத்து. 61

அந்தவவன் றன்னையே யானாத வன்சரணைச்
சந்த முடனடைநீ தார்விசையா—முந்தவவன்
றன்னருளான் மேலான சாந்தியையுஞ் சாயாத
வன்பதமும் நீபெறுதி வாய்ந்து. 62

இவ்வாறு ஞானமுனக் கிங்கே யெழில்மறையிற்
செவ்வா மறைப்பொருளைச் செப்பினேன்—னெவ்வாறு
தன்னியல்லை யாராய்ந்து சாய்ந்தனை, யிச்சித்தாய்
பின்னியல்வாற் செய்நீ நிகழ்ந்து. 63

இன்ன மறைப்பொருள்கட் கெல்லா மிகமேலா
மென்னமருஞ் சொல்லி னிறுதிகேள்—முன்னமரு
நிட்டன் றிடனென்று நித்தா லுனக்கிதமாப்
பட்டதனைச் சொல்வன் பரிந்து. 64

என்னை மனனம்பண் ணென்பத்த னாகியே
யென்னை யருச்சி யெனைவணங்கு—என்னையே
மேவுதிநீ யெய்யுனக்கு நிக்கறுதி சொன்னேனு
னேவுதலற் றென்னுகப்பா லுறு. 65

எல்லா வறங்களையு மிங்கறவிட் டென்னையே
நல்லார் சரணமா நண்ணியிடு—தொல்லாரும்
பாவங்க ணின்றன்னைப் பரிவிடு விப்பனுன்
றாவந் தனையொழிநீ தான். 66

இப்பொருளை யில்லாத் தவத்தார்க்கு மென்னிடையின்
மெய்ப்பொருளாம்பத்தியிலாவிணர்க்குஞ்—செகப்படவே
யிச்சையுடன் கேளார்க்கு மென்னைப் பொருதார்க்கு
மச்சமுற நீயுரையே லாகை. 67

இத்தகையின் மேலா மறைப்பொருளை யேவனென்றன்
பத்தரிடை நின்று பரிந்துரைக்கு—மத்தகையோ
னன்பாற் பரமமாம் பத்திசெய்தி யையமற
வின்பா லெனையடையு மேய்ந்து. 68

மானிடரி லாங்கவனின் மற்றொருவ னென்னுகப்பிற்
றனியல்வு மிக்கவன் றனில்லை—மேனிசழு
மெக்காலு மேதினியி லில்லையா மென்னுகப்பில்
தக்கார்வ மிக்கினியோன் றான். 69

நாமிருவர் நின்றியம்பு நல்லறஞ்சே ரிக்கதை
பாமருவி யோதும் பரிவனைத்—தாமருவு
நெஞ்சறிவா மெச்சத்தா னேயே யிறைஞ்சினனென்
றெஞ்சலற யான்மதிப்ப னிங்கு. 70

சேர்ந்த சிரத்தையினைச் சேரா தசூயையினை
யார்ந்திதனைக் கேட்குநா ளவனுந்—தீர்ந்தது பா
ரற்றே யறிவெய்தி மன்படையோர் தங்கூட்டம்
பெற்றே மகிழும் பெருந்த 71

பார்த்தனே நின்னொருமை பற்றியாஞ் சித்தத்தாற்
சீர்க்கவிது கேட்டுச் சிறந்தாயோ—பேர்த்துன்னை
மோகத்தைச் செய்மாய முற்றுங் கழிந்ததே
போகத்தைச் சேர்ப்பான் புணர்ந்து. 72

என்றிறையோன் சொல்ல வெழில்விசையன் செப்புரு
னின்றியலு மோகம்போ யெய்ந்துமதி—நின்றநா
னுன்னருளினான் மயக்கமொன்றின்றிச்சென்றியல்வன்
சொன்னதெல்லாஞ் செய்வன் றுணிந்து. 73

இவ்வண்ணம் மாயனுக்கு மேந்துயர்சீர்ப் பார்த்தனுக்கு
மெய்வண்ணம் வார்த்தை விளைந்தபடி—செய்வண்ண
நீண்டேநான் கேட்டேனிவ் வற்புதத்தை யிவ்வுடலிற்
பூண்டே மயிரெறியாம பூண்டு 74

ோர் வியாதன் றிருவருளான் மிக்குயர்ந்து | மைக்
ோர் மறைப்பொருளா மியோகத்தைப்—பேரான
கண்ணனவன் றானே கருதத்தோ னுரைத்தருள
வெண்ணமுடன் கேட்டே னிங்கு. 75

மன்னவா கேசவனும் பாண்டவனும் வார்த்தையினை ச
சொன்னவா நானினையுந் தோறெல்லா—மின்னவா
றென்னவொண்ணு தற்புதமாயேல்கின் றபுண்ணியமாய்
பன்னவுகப் பாவன் பயின்று. 76

ஆங்குமிக வற்புதமா மண்ணல் வடிவினையு
நீங்குநினை தோறு மெழுவியப்பா—யோங்கு
முகப்புமிகு மேன்மேலு முற்றென் றுரைத்தான்
மிகப்புகழ்சேர் சஞ்சயன்றான் மிக்கு. 77

எவ்விடத்தான் யோகத்துக் கீசனாங் கண்ணன்று
எவ்விடத்தான் வில்லேந் தெழில்விசய—னவ்விடத்தே
வாய்ந்த திருவிசையம் வாழ்வுவள நீதியிட
மேய்ந்தனவென் றேமதிப்பன் யான். 78

தன்மைக் கருமந் தருகுலத்தின் றூய்மையுட
னன்மை பயில்சரா சன்கறிய—தொன்மைப்
பரமனருள் கீதைப் பதினெட்டா மோத்தாகுஞ்
சரமமுறைத் தோத்திரத்து தான்.

உடலுயிரின் றன்மை யுறுஞானத்தின் றன்மை
யிடரிலெழி லீசன்ற னேற்றந்—திடவசுரர்
தேவ ரியல்புதனைச் சேர்கருமஞ் சார்ந்தமர்வு
மாவனவின் றேறத் தமர்ந்து.

# பின்னுரை.

தூயகரு மங்களினூற் சத்வமிக வுண்டாக்கி
மேயவுணர் வாலுயிரி னீறறிந்து—மாயனிடை
முத்தியுறுஞ் சிந்தை முயலாசை முன்பணிவாற்
பத்தியுறல் கீதைப் பயன். 1

எவ்வறமுஞ் சொல்லி யிறுவாஞ் சுலோகத்தாற்
செவ்வறமாந் தன்சரணாச் செப்புதலா—லவ்வறத்துந்
தான்றுணையா மாயன் றனித்துத் தனையளிக்கும்
வான்றுணையா மென்றிருத்தல் வாய்ப்பு. 2

நெஞ்சுட் கலந்தென்னை நேர்நினைத்த நூலிட்டுச்
செஞ்சுடர்சேர் தாற்பரிய தீபத்தாற்—பஞ்சவர்தந்
தேர்ப்பாகன் கீதைச் சிறந்தபொருள் காட்டினே
னோர்ப்பாரு நன்றே யினிது. 3

யாய னருள்கீதை மன்னு பொருடன்னைத்
தூய பெரும்பூதூர்த் தோன்முனிதன்—மேய
தகையான் மணவாள மாமுனிவன் சொன்னான்
றொகையாரும் வெண்பாச் சுருக்கு. 4

சொட்டை மணவாளத் தூய்முனிவன் சொற்செய்த
சட்ட மருவுந் தமிழ்ப்பாவால்—கட்டெழில்சேர்க்
கோமா னருள்கீதை கூறும் பொருளுணர்வார்
சீமா னடிசேர்வர் சென்று. 5

# பகவத்கீதைவெண்பா.

## குறிப்புரை.

### அத்யாயம் 13.

### க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாகயோகம்.

1. இந்த சரீரம—நான் தேவன், நான் மனிதன், நான் பருத்தவன், நான் இளைத்தவன் என்பதாகப் போக்தாவான ஆத்மாவோடு வேற்றுமையில்லாமல் ஒன்றுபட்டுத் தோன்றுகின்ற இந்தசரீரத்தை. இகல் விசயா—வெற்றியையுடைய அர்ச்சுனா. கேத்திரம் என்று—(சரீரத்திலும் வேறானதாய்ப் போக்தாவாயிருக்கின்ற ஆத்மாவின் போகத்துக்காக ஏற்பட்ட) க்ஷேத்திரம் என்பதாக. கேத்திரம்—க்ஷேத்ரம். இதனை நடு

கறிவான் க்ஷேத்ரஜ்ஞனென்று—'இதை நான் அறிகிறேன்' என்று எவன் அறிகின்றானோ அவன் (அறியப்படுவதான சரீரத்திலும் வேறாய் அறியுமவனாயிருக்கின்ற க்ஷேத்திரஜ்ஞனென்பதாக. உயிரென்றவனை ஆங்கறிவார்—ஆத்மாவின் உண்மைத்தன்மையை யறிந்தோர்கள்.

2. சீர்த்த—சீர்மையையுடைய. இவையிரண்டும் மற்றறியும் இந்த அறிவு—சரீரத்தையும் ஆத்மாவையும் வெவ்வேறு பிரித்து அறிவதோடு அவையிரண்டும் எனக்கு சரீரமாய் இருப்பதுமல்லாமல் என்னுடைய ஸ்வரூபங்கள் என்று அறிகின்ற இந்த அறிவானது. நவையில் அறிவு—குற்றமற்ற ஞானம்.

3. விகற்பு—விகாரம். இவன்—க்ஷேத்திரக்ஞன். சுருக்கத்து—சுருக்கமாக.

4. போத முனிவர்—ஞானிகளான பராசரர் முதலிய ருஷிகள். விவிதம்—பல்வேறு பிரிவாக.

5. பூதங்கள்—க்ஷேத்திரத்தை யுண்டாக்குந் திரவியங்களான பிரதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்கிற மஹாபூதங்கள். பூதாதி—பூதங்களுக்கு ஆதியான அஹங்காரம். புத்தி—புத்தியென்கிற மஹான். பிரகிருதி—அவ்யக்தமென்னப்படுகின்ற பிரகிருதி. இந்தி

யம் பதினொன்று—(வாய், கை, கால், ஆஸநம், உபஸ்த்தம் என்கிற கர்மேந்திரியங்கள் ஐந்தும்; செவி, மெய், கண், நா, மூக்கு என்கிற ஞானேந்திரியங்கள் ஐந்தும்; மனம் ஒன்றுமாக) இந்திரியங்கள் பதினொன்று. இந்தியம்—இந்திரியம். புலன் ஐந்து—சத்தம், பரிசம் உருவம், ரஸம், கந்தம் என்கிற இந்திரிய விஷயங்களான இவை. தூச்சு—க்ஷேத்திரம். "தூச்சிலிருந்து துயர்கூரா மாண்பினிதே" யென்றதுகாண்க. இருப்பு ஆகும்—ஆதாரம் ஆகும். (இதனால் பிரகிருதியாதியாக பிரிதிவீ யீறாகவுள்ள பொருள்களினாலாக்கப்பட்டு, இந்திரியங்களுக்கு ஆதாரமாய், இச்சை சினம், இன்பம் துன்பம், என்று வேறுபட்டுப் பூதங்களின் தொகையாய்ச் சேதனனுடைய சுகதுக்க நுகர்ச்சிக்கு ஆதரமாயுள்ளதே பயனாகவுடையதுதான் க்ஷேத்திரமெனப்படும் என்று கூறியதென்க.)

7. மானத்தின மாறு நிலை—அமானித்வம்; அதாவது உயர்ந்த ஜனங்களைத் திரஸ்காரஞ் செய்யாமை. டம்பத்தின் மாறுநிலை—இவன் தார்மிகன் என்று பிறர் தன்னைப் புகழவேண்டுமென்கிற எண்ணத்தினோடு தருமானுஷ்டானஞ் செய்யாமை. கொலையின் மாறுநிலை—பிறருக்கு ஹிம்ஸை புரியாமை. பொறை—பொறுமையுடைமை. அதாவது பிறரால் தான் பீடிக்கப்பட்டா

லும் சித்தவிகாரமடையாமை. செவ்வை—ஒழுக்கம். அதாவது, பிறர் விஷயத்தில் திரிகரணங்களும் ஒப்ப ஒழுகுதல். குருவின்பால் நணுகல்—ஆத்ம ஞானத்தை யுபதேசித்த ஆசாரியனை யடுத்துப் பணிந்து நிற்றல். சுத்தி—தூய்மை; அதாவது, ஆத்ம ஞானத்துக்கும், அதன் ஸாதனத்துக்கும் வேண்டியதாய்ச்சாஸ்திரத்திற் கூறிய மனோவாக்குக் காயங்களுக்குண்டான யோக்கியதையை யுடைமை. துணிவுடைமை—திடனுடைமை: அதாவது, அத்யாத்ம சாஸ்திரத்திற்கூறிய பொருள்களி னிடத்தில் கலங்காத உறுதியுடைமை. மனத்தைச் செறுப்பு—மனத்தை நீக்கல்; அதாவது, ஆத்ம ஸ்வ ரூபத்தை யொழிந்த இதர விஷயங்களில் போகாமல் மனத்தை நிவர்த்தி செய்கை.

8. ஆங்காரமற்றொழிதல்—தேஹமேயாத்மாவென் கின்ற அபிமானம் ஒழிதலும், அப்படியே தனதல்லாத எல்லாப்பொருள்களினிடத்தும் தனது என்கின்ற அபி மானமொழிதலும். செரை—கிழத்தனம். புன்மை— சிறுமை. இதனை யுணர்தலாவது—சரீரம் இருக்கிற வரையில் பிறப்பு, இறப்பு, கிழத்தனம், நோய், துக்கம் என்கிற இந்த தோஷங்கள் ஒருபோதும் ஒழிக்கப் போகாதென்று உணர்தல்.

9. நின்ற நசை அறுதல்—ஆத்மாவையொழிந்தவைகளின்மீது நின்ற பற்றையொழித்தல். புதல்வர் தாரம் மனை ஒன்றும் மனம் அங்கு ஒழிவித்தல்—பிள்ளை, மனைவி, வீடு இவைகளின்மீது பற்றுவைத்த மனதைத் தவிர்த்தல். என்றுஞ் சமன் ஆர்ந்தே இருத்தல் உகப்பு வெறுப்பாம் பொருள்கள்சேர்ந்து வரலில் தெளிந்து—இஷ்டமாய் ஸந்தோஷிக்கத் தக்கதும் அனிஷ்டமாய் வெறுக்கத் தக்கதுமாகிய பொருள்கள் கலந்துவரும் விஷயத்தில் இவை ஸங்கல்பத்தால் வருவனவென்று தெளிந்து மாறுபடாது இரண்டையும் சமமாகப்பொருந்தியிருத்தல்.

10. என்பால்—ஸர்வேச்வரனான என்னிடத்தில். அனபாரும் பத்தி யமர்வுறுதல்—அன்போடுகூடிய பக்தியைப் பொருந்தியிருத்தல். தனி இடத்திற்சார்தல்—ஜனங்களில்லாத பிரதேசத்தில் வாழ்தல். ஜனங்குழுவு கண்டால்—ஜனங்கள் கூடியிருக்குமிடத்தைக் கண்டால். நனி உகப்புச் சேராநலம்—மிகுதியும் விருப்பம் பொருந்தாத நலத்தையுடைமை.

11. ஆருயிரின் மேலறிவிலாய்ந்தென்று நின்றமர்வு—ஆத்மஞானத்தில் எப்போதும் நிஷ்டையுடைமை. தத்துவத்தின் நீடறிவு—தத்துவ ஞானத்தைத்தரும்பய

பெருமையுறச் சிந்திக்கை. சீருடைய மெய்ஞ்ஞான மாம்—இவைகளே சிறப்புடையதான மெய்ஞ்ஞான மாகும்.

12. இவ்வறிவா லெய்து முயிர்தன்னை யீங்குரைக் கேன்—(முன் 7-வது செய்யுளிற்கூறிய) அமானித்வந் தொடக்கமான ஸாதனங்களால் அடையவேண்டுவ தான பிரத்யக் ஆத்மாவின் ஸ்வரூபத்தை [அதாவது ஜீவஸ்வரூபத்தை] இப்போது சொல்லுகிறேன். நல் அமுதம் எய்தலாம்—பிறப்பு இறப்பு முதலிய பிரகிருதி தர்மத்தைக்கடந்த அமிர்தமென்கின்ற ஆத்மாவைப்பெற லாம். ஆதியிலது—ஆதியில்லாதது. எற்பரமாய்—எனக்கு ஆட்பட்டதாய். ஆன்ற பிரமமாய்—பெரிதான குணத்தோடு கூடினதாய்; அதாவது தேகத்தின் வேறா னதாய் அத்தேக முதலியவற்றால் அளவிடவொண்ணாத தாய். இலது உண்டென்று உரைப்பது இல்—(காரிய காரணமாகிற இந்த இருநிலைமையுமில்லாத தாகை யால்) இதன் ஸ்வரூபம் அஸத் என்றாவது அல்லது ஸத் என்றாவது உரைப்பது ஸாத்யமில்லை.

13. அப்பொருளின் தன்மை—அந்தப் பரிசுத்த ஆத்ம ஸ்வரூபமானது. எல்லாப்பக்கங்களிலுங் கை கால்களையுடையது. [அதாவது கைகால்களாற்செய்யக்

கூடிய காரியத்தைச செய்யக்கூடியதென்பதாம்.] அப்படியே எல்லாப்பக்கங்களிலும் கண், தலை, முகம் இவற்றையுடையது. எங்கும காதுகளையுடையது. மேலும் உலகிலுள்ள எல்லாப்பொருள்களையும் வியாபித்துக்கொண்டிருப்பது.

14. எல்லாப் புலனியல்வும் எய்ந்து—எல்லா இந்திரிய வியாபாரங்களும் பொருந்தி. எல்லாப் புலனியல்வு மில்லையாய்—எல்லா இந்திரிய வியாபாரங்களும இல்லாததாய். தத்து அற்று—[தேவாதி சரீரங்களில் ஒட்டு இல்லாமலே. எல்லாந் தரிக்கும்—தேவாதிஸகல சரீரங்களையும் தரித்துக்கொண்டிருக்கும். குணம் மூன்றின்றி அதனை மிக துய்க்கும் ஸத்வம் முதலான மூக்குணங்களு மில்லாததாயினும் ஸத்வம்முதலான குணங்களைத் திறமைமிகப் புஜிக்கும்.

15. பூதங்களுக்குட் புறம்புமாய்—பிருதிவி முதலிய பூதங்களைவிட்டுச் சரீரமின்றி வெளியிலுள்ளதாய். மீதங்கு இயல்வதுமாய்—அப்பூதங்களுக்குள்ளும் இருப்பதாய். நுண்ணிமையினுன் மிகவும் நோக்கரிதாய்—அதிக ஸூக்ஷ்ம மாகையால் தேகத்தைக்காட்டிலும் வேறுனதொன்றென்று நோக்குதற்குக் கூடாததாய். தூரத்தும் அருகும் ஆம்—(அமாநித்வம் ஆதியான குண

ங்களையின்றி அவற்றிற்கு மாறான குணங்களையுடைய வர்கட்கு அவர்கள் தேகத்திலிருந்துகொண்டே) தூரத்திலிருப்பதாய் (அந்த நற்குணங்களைப் பொருந்தியவர்களுக்கு) அருகிலிருப்பதாயும் ஆகும்.

16. வேறுபாடு அற்ற அது—பிரிவினையில்லாத அந்த ஆத்ம வஸ்துவானது. வேறுபாடு உற்றதுபோன் மிக்கிருக்கும்—இவன் தேவன், இவன் மனிதன் என்று தேவாதி ரூபமாய்ப் பிரிக்கப்பட்டதுபோல மிகத் தோற்றிக்கொண்டு நிற்கும். அது கூறுபாடு உற்றபொருள் தான் பரிக்கும் உண்ணும் உண்டாக்குமென அறியத்தக்கது—அவ்வாத்ம வஸ்துவானது சரீரமாகச் சேர்ந்திருக்கின்ற பிருதிவி முதலிய கூறுபாட்டையுடைய பூதங்களைப் பரிக்கும்: அப்படியே பூதஸம்பந்தமானவைகளைக் கிரகிக்கும்; அப்படி கிரகிக்கப்பட்டு வேறுஉருவமாய் மாறுபடுகின்ற அன்னம் முதலியவைகளையும் உண்டாக்கும் என்று அறியத்தக்கது.

17. சோதிகளின் சோதியாய்—தீபம், சூரியன், இரத்தினம் முதலியவைகட்கும் ஒளியைத்தரும் சோதி வடிவானதாய். தொக்க தமமீது பரமென்னும் உரை மேவியதாய்—சூழ்ந்துள்ள தமஸ்ஸு என்கின்ற சூக்ஷ்மப் பிரகிருதியைக் காட்டிலும் புறம்பானதென்று சொல்

லப்படுவதாய். போதமெனை—ஞானமே வடிவானதென்று. யாவர்க்கும் ஊனமற உள்ளிருக்கும்—மனிதர் முதலான எல்லார்க்கும் மாசகல ஹிருதயத்தில் நிலைபெற்றிருக்கும்.

18. க்ஷேத்திரமும்—க்ஷேத்திரத்தின் உண்மையையும ஞானத்து இயல்வகையும்—க்ஷேத்திரத்தைக் காட்டிலும் வேறான ஆத்ம ஸ்வரூபத்தைப் பெறும் ஞானத்தின் உண்மை வகையையும். மெய்ப்படியாம ஞேய வியப்பதுவும்—க்ஷேத்திரஜ்ஞனுடைய உண்மையான தன்மையையும். ஈதறிந்து—மேற்கூறிய உண்மையை யறிந்த. என் மயமும்—என் ஸ்பாவத்தை [அதாவது ஸம்ஸாரத்துக்கு உட்படாமையை] அடையும்படியான நிலைக்கு வருவான்.

19. சித்தும் அசித்தும் அநாதியெனச் சிந்தி—பிரகிருதியும் புருஷனும் அநாதிகாலமாய்க் கலந்துகொண்டே வருகின்றனவென்று நீ அறிவாயாக. அத்தில்—பிரகிருதியில். விகாரம்—இச்சை த்வேஷம் முதலிய விகாரங்கள். அணிகுணங்கள் -அமாநித்வம் முதலிய நற்குணங்கள். விகாரம் பந்தமுறும் வித்தாகும்: அணிகுணங்கள் பந்தமொழி வித்தாகும் என்க.

20. காரிய காரணங்கள் கர்த்தா இயற்றுமிடத்து எயபிரகிருதி எதுவாம்—காரியமான சரீரமும், காரண

மான ஞானேந்திரிய மனஸ்ஸுக்களும் கர்த்தாவாய் நின்று ஒன்றைச் செய்யுமிடத்தில் பொருந்திய பிரகிருதிதான் காரணமாய் ஏற்படுகின்றது. சுகந்துக்கம் புசிக்குந் தொடர்பதனில்—சுகதுக்கங்களை யனுபவிக்கிற ஸம்பந்தத்தில். ஒக்கவரும் புருடன் ஏதுவாம்—பிரகிருதியோடு கலந்துவருகின்ற புருஷன் காரணமாகின்றான்.

21. வாய்ந்த பிரகிருதி நின்ற புருஷன்—பூர்வபூர்வமான பிரகிருதியின் விகாரங்களான தேவர் மனுஷ்யர் முதலிய யோனி விசேஷங்களில் இருந்த இப்புருஷன். அதில் எய்ந்த—அந்த யோனிகளாற் பொருந்திய. சதசத்தாம் யோனிகளில் நல்லதும் கெட்டதுமான யோனிகளில்.

22. கண்டு எய்ந்து இசைவான்—உபதிருஷ்டாவாகவும் அநுமந்தாவாகவும் இருக்கிறான். உபதிருஷ்டா—கூடிப்பார்ப்பவன். அனுமந்தா—செய்யச் சம்மதிப்பவன். அவ்வுடம்பு தாங்கி யதிற்றுய்ப்பான்—தேஹத்தைப் பரித்து அதனுல்வரும் இன்பதுன்பங்களை யனுபவிக்கிறான். பேரீசன்—மஹேசுவரன். பரமவான்மா—பரமாத்மா.

23. அசித்து—பிரகிருதி. அந்தக் குணங்களுடன் ஆய்ந்தறிவான்—இனிச்சொல்லப்போகும் ஸத்வம் முதலிய குணங்களோடு பிரித்து அறிபவன்.

25. அவ்வாறறியார்—ஆத்ம ஸாக்ஷாத்காரத்துக்கு ஸாதனங்களான கர்மயோகாதிகளை யனுஷ்டித்தறிய அதிகாரமில்லாத சிலர். அறிவார்பால்—தத்துவந்தெரிந்த ஞானிகளிடத்தில். பவத்தைக் கடப்பார்—மரணாதிகளை யொழிப்பார்கள்.

26. நின்று இயலும் இந்தப்பொருள்—ஸ்தாவர ஜங்கமமான இந்தப் பிராணிகள். சித்தும் அசித்தும் சேர்ந்து புணர்ப்பதனால்—சேதநாசேதனங்களினுடைய சேர்க்கையினால், இயல்வது—உண்டாவது.

27. அத்துப் பரமேசனாகி—அந்தந்த தேஹம் இந்திரியம் மனம் இவைகளைக் குறித்துப் பரமேசுவரனாகி.

28. எவ்விடத்துந்தான் இறையாய்—தேவர் முதலான எல்லாச் சரீரங்களிலும் அவற்றிற்கு ஆதாரமாயும் ஆள்பவனுயுமிருக்கும் பதியாய். ஒத்தியல்வதா அறிவான்—(தேவாதிகள் போல் விகாரப்படாமல் ஞானமேவடிவாய்) ஒரே மாதிரியாக இருப்பதாய் அறிபவன். நலியான்—வருத்தப்படுத்தமாட்டான்.

29. 'ஆய்ந்திவனை' யென்றுள்ள தனிச்சீர் 'ஆய்ந்தவ' என்றிருத்தல் நேராகும். அங்ஙனங்கொண்டால், ஆய்ந்த. அகத்தா இவன் எனப்பிரித்து, அகர்த்தாவாயிருக்கின்றான் இந்த ஆத்மா எனப்பொருள்செய்து மூலபாடத்தின் கருத்திற்கு இசையும்படி கொள்ளலாம்.

30. பூதத்த இயல் வேறுபாட்டினையும்—(பிரகிருதி, புருஷன் என்று சொல்லப்படும் இந்த விரண்டு தத்துவங்களாயுள்ள தேவர் முதலிய) ஸகல பூதங்களிலும் தேவத்தன்மை, மானிடத்தன்மை, குறுகியிருத்தல் நீண்டிருத்தல் முதலிய வேறுபாடுகளையும். ஒன்றில் உறுவகையும்—அவ்வேறுபாடுகள் பிரகிருதி யென்னும் ஒரு தத்துவத்தில் மாத்திரம் இருக்கின்றவகையையும். பந்தப்பரப்பும்—அந்தப் பிரகிருதியினின்றும் உண்டாகின்ற புத்திரன் பவுத்திரன் முதலிய பந்தங்களின் விஸ்தாரத்தையும். அடைந்தாம்—அடைந்தவனாவான்.

32. விசும்பு—ஆகாசம். நுட்பத்தால்—சூக்ஷ்மமாயிருப்பதனால்.

33. இரவி—சூரியன். பிரகாசிக்கின்ற உலகத்தை விடப்பிரகாசிக்கப்பண்ணும் சூரியன் விலக்ஷணனாய் விளங்குதல்போல, அறியப்படும் க்ஷேத்திரத்தைவிட

அறிகின்ற க்ஷேத்திரியனான ஆத்மா விலக்ஷணனென்பது இச்செய்யுளின் கருத்து.

34. காயம்—க்ஷேத்திரம். உயிர்—க்ஷேத்திரஜ்ஞன். அறிவாங்கண்ணால்-ஞானக்கண்ணால். வீடு-விடுபடுதல்.

---

## அத்யாயம் 14.

## குணத்ரய விபாகயோகம்.

1. மேலறிவு—மேலான ஞானம். அதாவது பிரகிருதி, புருஷ விஷயமாய் அறிந்த எல்லா ஞானத்துக்கும் மேற்பட்டதான ஞானம். மீதமருந்தன்மையினை-ஸம்ஸாரமண்டலத்துக்குப் புறம்பான ஸித்தியை.

2. ஆர்ந்து—அடைந்து. சர்கத்தில்—சிருஷ்டியில்.

3. மிக்க பிரமம்—மஹத்பிரம்மம். எனது அசித்தில்—என்னுடைய பிரகிருதியினிடத்தில். உயிர் கெற்பத்தை யான் சேர்ப்பன்—ஜீவனென்னுங் கருப்பத்தை யான் தரிப்பிக்கிறேன். கேழ்கிளரும் பூதங்கள் உற்பத்தி சேரும்—(பிர்ம்மா முதலாகப் புல்லிறுதியாக

வுள்ள) விளங்கித்தோன்றுகின்ற ஸகல பூதங்களும் உண்டாகின்றன.

4. இந்தப் பிரமமே யோனி—பிர்ம்மமென்கின்ற இந்தப் பிரகிருதிதான் உற்பத்தி ஸ்தானம்.

5. பிரகிருதியுள்ளவையாம்—பிரகிருதியை விட்டுப் பிரியாமலிருக்கின்றவைகளாம். ஆருயிரைத் தேகத் தமரப்பிணிக்கும்—அழிவற்ற ஆத்மாவைச் சரீரத்தில் தானே தங்கும்படி கட்டுப்படுத்தும்.

6. அழுக்கற்று ஆர்தலினால்—நிர்மலமாய் இருக்கையால். சுகத்தில் அறிவில் மன்னு நசைதன்னால்—சுகத்திலும் ஞானத்திலும் பொருந்திய பற்றை யுண்டுபண்ணுவதனால்.

7. ராகம்—ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒன்றுக்கொன்றுண்டான ஆசை. தாகம்—திருஷ்ணை; அதாவது சப்தாதி விஷயங்களெல்லாவற்றிலுமுண்டான வாசை. சங்கம்—ஸங்கம்; அதாவது புத்திரமித்திராதிகளைக் கட்டியணைக்கவேண்டுமென்னுமாசை. தேகி-புருஷன்.

8. மோகம் அளிக்கும்—விபரீதமான ஞானத்தை யுண்டுபண்ணும். ஓராமை—பிரமாதம். சோம்பல்-

ஆலஸ்யம்; அதாவது கர்மத்தைத் தொடங்கிச் செய்யா மலிருக்கை.

9. துவக்கும்—கட்டுப்படுத்தும். ஓர்ப்பின்மை—வஸ்துவையறிய வொண்ணுமை. மைத்தும்—தமோ குணமும்.

10. இம்மூன்று குணங்களுங் கலந்திருப்பனவேயா யினும் ஊழ்வினைக்கும் உணவின் வித்யாஸத்துக்குந் தக்கபடி ஒவ்வொரு குணமும் மற்றை யிரண்டு குணங் களையும் அடக்கித் தான் தலையெடுத்து நிற்குமென்பது இச்செய்யுளின் தாத்பர்யம்.

11. பொறிவாயிலெங்கும்—கண்முதலிய ஸகலமா ன ஞானமார்க்கங்களிலும். உயரும்—தலையெடுத்து நிற்கும்.

12. வீணுழற்றி—பயனின்றி யுழைத்தல். சாயாபுல னெழுச்சி—அடங்காதனவையாய் இந்திரியங்கள் எழு தல். ஆசை-விஷயங்களில் ஆசையுண்டாதல்.

13. ஒன்றில் முயல்வறுதல்—ஒன்றிலும் பிரவ்ருத்தி யுண்டாகாமை. மோகம்—விபரீதஞானம். குருமுதல் வா—குருசிரேஷ்டனே.

14. சத்துவமிக் கோக்கந்தரும்பொழுதில்—ஸத்வ குணமானது விருத்தியான காலத்தில். 'சத்துமிக்கு' என்பதனை சததுவமிக்கு என்று திருத்திக்கொள்க. இருக்கின்றபடியே கொண்டால் சத்து என்பதற்கு ஸத்துவம் என்று பொருள்செய்க. தத்துவத்தின் மேலறிவு சேர்ந்தார்—ஆத்மாவின் உண்மையை நன்றாக அறிந்தவர்கள் கூடியுள்ள.

15. இரசத்துயர்வின் மாய்ந்தவன்—ரஜோகுணம் தலையெடுத்தபொழுது மரித்தவன். தமத்துயர்வில்—தமோகுணந்தலையெடுத்தபொழுது.

16. நின்மலமாம் நற்பயனை—நிர்மல மானதாய்த் துக்க லேசமும் அற்றதாயிருக்கும் பலனை. பிற்குணமென்றது தமோகுணத்தை.

18. மேலடைவர் முற்குணத்தோர்—ஸத்வகுணத்தி விருப்பவர்கள் வரவர மேலான பதவியை யடைவார்கள். [அதாவது ஸம்ஸாரத்தினின்று மோக்ஷத்தை யடைகிறார்கள்.] நடுவோ மூலகிற்றுனிற்பர்—சுவர்க்க லோகத்திலிருக்கப் பெறுவார்கள். பீடழிவர்—நலங் குலைவார்கள்.

19. குணமவற்றில் வேறுபட்ட கத்தாவை—குணங்களைத்தவிர்த்து வேறாகவுள்ள கர்த்தாவை. குணந்தன்

னிற் பரன்—குணங்களுக்குப் பரனாகவிருக்கின்றான். [இயற்கையிலேயே தூயனான ஆத்மா பூர்வகர்மங் காரணமாகவரும் குணஸங்கத்தால் கர்த்தாவாகவிருக்கிறானென்றும், ஆத்மா ஸ்வபாவத்தில் கர்த்தாவல்லனென்றும் எப்பொழுது அறிகிறானோ அப்பொழுது அவன் நமக்கு ஸமமாகின்றானென்பது இப்பாட்டின் கருத்து.]

20. இங்குடலம் மேவியமர் இக்குணங்கள் மூன்றினையும்—சரீரமெடுத்திருக்கும் பொழுதே, சரீராகாரமாய் விகாரப்பட்டிருக்கும் பிரகிருதியினின்று முண்டான இந்த ஸத்துவம் முதலிய குணங்கள் மூன்றையும். மன்னினவன்—ஞானமே வடிவான ஆத்மாவைக் கண்டவன். அமுதஞ்சேரும்—அமிருதமான ஆத்மஸ்வரூபத்தை யடைவான்.

21. எங்ஙனே—எவ்வித உபாயத்தால். இத்தை—ஸத்வம் முதலிய இக்குணங்களை.

22. ஒளி—பிரகாசம்; இயற்றி—பிரவ்ருத்தி. முனியான்—(இவை ஸத்துவாதி குணகாரியங்கள் என்று நினைத்து அவைகளைப்) பகைக்கமாட்டான்.

23. உதாசீனன்—விரும்பவாவது, வெறுக்கவாவது செய்யாதவன். சேட்டியான்—சேஷ்டியான்.

24. தன்னமர்ந்த—தன்னுள் தானிருப்பவனாய். பழி—நிந்தை.

25. ஒன்னலர்—சத்துருக்கள். செய்முயற்றி யெல்லாஞ்செய்யான்—தான் சரீரத்தை யெடுத்திருப்பதால் வரும் எந்த வியாபாரங்களையுஞ்செய்யத்தொடங்கான்.

26. குணஞ்செற்று—ஒருவராலும் ஒழிக்கப்போகாத இந்த ஸத்வாதி குணங்களைக்கடந்து. பிர்மமாந் தன்மையினை—பிர்ம்ம பாவத்தை யடையும்படியான நிலைமையை.

27. குன்று—அவ்யயமாயிருக்கும். ஒருமை சார் சுகம்—ஏகாந்தத்தால்வரும் இன்பம்.

## அத்யாயம் 15.

# புருஷோத்தமயோகம்.

1. மீதா முதலாய்—மேற்புறத்தில் வேராய். மிகு சாகை கீழாக—மிகுந்துள்ள கிளைகள் கீழ்ப்புறத்திலுள்ளதாக. உலகாம் உயரரசை—ஸம்ஸாரமென்கின்ற உயர்ந்த அரசமரத்தை. போதாந்தளிர்கள் மறையாக—

உண்டாகின்ற இலைகள் வேதமாக. [எழுலோகங்களுக்கும் மேலாகவிருக்கின்ற நான்முகனை ஆதியாக வுடைமையால், 'மீது முதலாய்' என்றும், பூவுலகில் வாழும் ஸகலமான மனிதர், பசு, மிருகம், பூச்சி, புழு, பக்ஷி, தாவரம் இவைகளை முடிவா யுடைமையால் 'மிகுசாகை கீழாக' என்றுங் கூறியதென்க.]

2. அதுக்கு—அந்த விருக்ஷத்துக்கு. தாழ்வில் குணத்துயருஞ் சார்புலன்கள் சூழ்தளிரா—தாழ்வில்லாத ஸத்வம் முதலிய குணங்களால் மேன்மேலு முயர்கின்ற சப்தம் முதலிய விஷயங்கள் தளிராகக்கொண்டு. [கந்தர்வர், யக்ஷர் என்று மேலும், மனுஷ்யாதி ரூபமாய்க் கீழும் அம்மரத்துக்குப் பலகிளைகள் பரவுகின்றனவென்க.]

3. மூல அரசாரிதனை—நன்றாய் வேரூன்றிய இந்த அரசமரத்தை. அறவாம் வலிசசத்திரங்கொண்டு—பற்றின்மை யென்னுந் திடமான கத்தியைக்கொண்டு.

5. மானம்—தேகமே ஆத்மாவென்கின்ற அபிமானம். நசை—போகத்தில் பற்று. உயிர்த்தன்மை யமர்ந்து—ஆத்மஞானத்தில் ஊன்றிநின்று. ஆசையகன்று—ஸமஸ்த காமங்களையுமொழித்து. இன்பதுன்பவிருமை விட்டு—இன்பம் துன்பம் என்கின்ற இரண்டையும் விட்டு.

மன்பதம்—பெருமைபெற்ற பதத்தை; என்றது ஆத்ம ஸ்வரூபத்தை.

6. உயிர்ச்சோதியினை—ஜோதிரூபமான ஆத்மஸ்வரூபத்தை. தாமம்—ஜோதி.

7. இவ்வுலகில்—ஜீவலோகத்தில். வசிக்கும்—இருக்கிறான்.

8. இவற்றை வாங்கியேகும்—ஸூக்ஷ்மங்களோடு கூட இவற்றைக் கிரகித்துக்கொண்டு போகிறான். ஈசனவன்—அந்தச் சரீரத்திலுள்ள இந்திரியங்களுக்கெல்லாம் ஈசனாகவிருக்கிறான்.

9. துவக்கு—உடல். சிங்கை—நா. புன்பொருள்களெல்லாம்—சப்தம் முதலிய இழிவான விஷயங்களையெல்லாம்.

10. மன்னியவனை—பொருந்துகின்ற இவ்வாத்மாவை. நாட உணர்வு அழியார்—இந்தவாத்ம வஸ்துவை எந்த நிலையிலும் அறியவல்ல அறிவுகெடாத ஞானிகள். முற்றுணர்வர்—(இது ஞானமே வடிவாயுள்ளதென்றும், தேவத்வ மநுஷ்யத்வாதிகளெல்லாம் சரீரத்தைச்சேர்ந்தவென்றும், இது சரீராதிகளைக் காட்டிலும் வேறாயி

ருப்பதொன்றென்றும்) நன்குருயுணர்வார்கள். மூடரென்றது தேகமே ஆத்மாவென்று பிரமிக்கின்றவர்களை.

11. மன்னு கருமத்து மருவு இயல் யோகியர்கள்—என்னிடத்துப்பொருந்தியபிரபத்தியோடு கர்மயோகம் முதலானவைகளில் யத்னத்தைச் செய்யும் யோகியர்கள். நிறைவின்றி—மனத்தெளிவு இல்லாமல், ஆத்மாவைக்காணும் ஞானம்இல்லாமல். எஞ்சலற—குறைவற.

12. அங்கி—அக்னி. இலகி—விளங்கி. வனப்பு—அழகு.

13. பூதலத்தின் மேவி- பூமியில் ஆவேசித்து. மிடுக்கு— வலிமை.

14. ஒள்ளெரி-வைசுவாநரமென்னும் ஜாடராக்னி. கலவா—கலந்து. வாயுவிரண்டு-பிராணம, அபாநம். அரப்புசிப்பன்—நன்குசப்புஜிக்கின்றேன்.

15. எல்லார் இதயத் திருப்பேன் நான்—(முற்கூறிய சந்திரர் சூரியர் முதலான) எல்லாருடைய ஹிருதயத்திலும் (எல்லாவற்றையும் என் ஸங்கல்பத்தாலே நியமித்துக்கொண்டு) நான் ஆத்மாவா யிருக்கிறேன். [ஸகலமான பிரவ்ருத்தி, நிவிருத்திகளுக்கும் ஏதுவான ஞானமுண்டாவதற்கு ஸ்தானமாகையால் இருதயத்

தைச் சொன்னதென்க] நினைவு-ஸ்மிருதி; அதாவது முன் அனுபவித்த வஸ்துவிஷயமாய் அனுபவ ஜந்ய மான ஸம்ஸ்காரத்தினால் மாத்திரம் பிறப்பதொன்று. அறிவு-ஞானம்; அதாவது-இந்திரியம், லிங்கம், ஆக மம், யோகம் இவைகளாலுண்டாகும் வஸ்து நிச்சயம். நாட்டம்—ஊஹம்; அதாவது இந்தப் பிரமாணம் இப் படி பிரவ்ருத்திக்கத் தக்கதென்று பிரமாண பிரவ்ருத்தி யோக்கியதையின் விஷயமாய் ஸாமக்ரீ முதலானவை களை நிரூபிப்பதினாலுண்டான பிரமாண ஸஹகாரிக் ஞானம். வேத்தியன்-அறியப்படுமவன். ஸூர்யன், வாயு, சந்திரன், இந்திரன் முதலான எல்லார் விஷய மாகவும் சொல்லும் வேதங்களும் அந்த ஸூர்யன் முத லானோர்க்கு அந்தர்யாமியாயிருக்கும் பகவானையே சொல்லுகின்றனவென்று கொள்ளவேண்டு மென்பது பற்றி, "வேதங்கள் யாவைக்கும் வேத்தியன் நான்" என்று கூறப்பட்டதென்க.

16. கரன்—க்ஷரன். அக்கரன்—அக்ஷரன். பூதவுயி ரெல்லாங் கரனும்—(ஜீவ சப்தத்தாலே கூறப்படுவன வாய்ப் பிரமன்முதல் புல்லிறுதியாகவிகாரப்படுதலையே யியல்பாகவுள்ள அசித்தோடு கலந்திருக்கின்ற) பிராணி ஸமூகமெல்லாம் கரனென்று சொல்லப்பட்ட புருஷ னும்.

17. உத்தமனே யாம் புருஷன் அன்னியன்—உத்தமன் என்கின்ற புருஷனே முன்சொன்ன பத்தர், முக்தர் என்கின்ற க்ஷர அக்ஷர புருஷர்களைக்காட்டிலும், வேறுபட்டவன். பரமன்மா வென்றுரைத்தான்—எல்லாச் சுருதிகளிலும் பரமாத்மாவென்று சொல்லப்படுவான். மூன்றுலகம் தரித்து—(அசேதனம், அத்தோடு கலந்த ஜீவன், அதினின்று விடுபட்ட முக்தன் என்று பிரமாணங்களால் அறியப்படும்) மூன்று லோகத்தையும் (ஆத்மாவாய்ப் பிரவேசித்துத்) தரித்து. குன்றாத—அழியாத.

18. க்ஷரனென்னும் ஜீவனைக் கடந்துபோய் அக்ஷரனென்கின்ற முக்த புருஷனைக்காட்டிலும் உத்தமனாக உயர்ந்திருக்கிறேனாதலால் வேதத்திலும் உலகத்திலும் நான் புருஷோத்தமனென்று பிரசித்தனாகவிருக்கிறேனென்பது இச்செய்யுளின் பொழிப்பு. உலகு—என்றது இங்கே மநுவாதி ஸ்மிருதிகளை.

20. மறைப்பொருளை—ரஹஸ்யார்த்தத்தை. அனைத்துஞ்செய்வதனும்—கிருதகிருத்தியனுமாவான். நெறியா—நெறியாக.

## அத்யாயம் 16.

# தெய்வாஸுர ஸம்பத் விபாகயோகம்.

1. அஞ்சாமை—(இஷ்டந்தவிர்ந்து அனிஷ்டங்கைப் படுவதென்கிற துக்கத்துக்கு ஹேதுவான) பயங்கொள் ளாமலிருக்கை. நெஞ்சு தெளிவு—மனத்தெளிவு; அதா வது, அந்தக்கரணம் ரஜஸ்ஸு தமஸ்ஸுக்களோடு கல வாமலிருக்கை. வாய்ந்தறிவாம் யோகநிலை—பிரகிருதிக் குப்புறம்பான ஆத்ம வஸ்துவைப் பகுத்தறிவதில் நிலை. எஞ்சாத தானம்—குறைவில்லாததானம். அதாவது, நியாயமாய் ஸம்பாதித்த தனத்தை யோ க்கியர்களுக் களிக்கை. தமம்—மனத்தை விஷயங்களி னின்றுந் திரும்பும்படி பழக்குகை. எச்சம்—யக்ஞம்.

2. மெய்ம்மையாவது தான் கண்டது கண்டபடியே பூதங்களுக்கு இதமாகப் பேசுகை. குறளைச்சொல்லா மை—பிறர்க்கு அநர்த்தத்தைத்தரும் வார்த்தையை ஒரு வருக்குச் சொல்லாமை. நாண்—செய்யாததைச் செய்த வில் வெட்கம். பாவுபொருட் சாபலந்தீர் பண்பு— (ஆசைப்படும்படியான) நெருங்கியுள்ள பொருள்களைக் கண்டு சபலப்படாத தன்மை.

3. தேசு—ஒளி. அதாவது துர்ஜனர்களால் திரஸ் கரிக்கப்படாமை. திண்மை—உறுதி. அதாவது மஹாத்

நான ஆபத்திலும் செய்யவேண்டியதைச் செய்தே தீர வேண்டுமென்கிற உறுதி.

4. தன்மமிலா டம்பம்—தர்மமில்லாத வீண் டம்பம்; அதாவது தார்மிகனென்று தன்னைச் சொல்ல வேண்டுமெனக்கருதி யதற்காகத் தர்மத்தை யனுஷ்டிப்பது. தர்மத்தை நோக்கிச் செய்யப்படாமல் கேவலம் டம்பமே பிரதானமாகக் கருதிச் செய்யப்படுவதாகலால் அத்தர்மத்தைத் 'தன்மமிலா டம்பம்' என்று கூறினரெனக. செருக்கு—விஷயங்களை யனுபவிப்பதால (கிருத்திய கிருத்தியங்களில அவிவேகத்தையுண்டாக்கும்) ஸந்தோஷம். துன்மானம்—(தன்னுடைய வித்தை நற்குடிப்பிறப்பு இவைகளுக்குத்) தகாத அபிமானம். செற்றம்—கோபம். நன்மை யறியாமை—பாவாதத்துவஙகளென்ன, கிருத்திய கிருத்தியங்களென்ன இவைகளை அறியாமை. ஆசுரமாம் செல்வஞ் செறிவாருக்கு—அசுரச் செல்வத்தைப் பொருந்துமவருக்கு. [இங்கே அசுரர்களென்றது பகவான் ஆக்ஞையைக் கடந்து செல்பவர்களை யெனக.]

5. தெய்வச்செல்வம் மோக்ஷத்து நாடு உறப்பாம. ஆசுரம் நைவகைசேர் பந்தத்து நாடு உறப்பாம். பார்த்தா! நீ சோகியாதே. எனெனில் நீ தெய்வஸம்பத்தைப் பெற்றுப் பிறந்திருக்கின்றாயெனக.

6. பூதம்—இந்தக் கர்மபூமியில் கர்மஞ்செய்யும் பிராணிகளின் சிருஷ்டியானது. இருவகையாய்ப் போரும்—இரண்டு விதமாயிருக்கும். ஆது—அது; சுட்டு நீண்டது. தெய்வம்—தெய்வசிருஷ்டி.

7. சுவர்க்கம், புத்திரன் பசுமுதலிய அப்யுதயத்துக்கு ஸாதனமான வைதிகதர்மம் இல்லறமென்றும், மோக்ஷஸாதனமான வைதிக தர்மம் துறவறமென்றும் அறிக. மெய்குன்றாத் தூய்மை யென்றது—சாஸ்திரத்திற்சொன்ன வைதிக கர்மாநுஷ்டானத்துக்கு வேண்டிய சரீரசுத்தியை. ஆசாரம் என்றது—ஸந்தியாவந்தனமுதலிய ஆசாரத்தை. வாய்மை—ஸத்யம்; அதாவது அறிந்தபடி பூதங்களுக்கு ஹிதமாகப் பேசுவது. அவர் மாட்டு—அந்த அசுரப்பிறவியை யடைந்தவர்களிடத்தில்.

8. இச்சகத்து மெய்யன்று—(ஸத்யமான பிர்ம்மத்தினின்று முண்டாகிப் பிர்ம்ம ஸ்வரூபமாயிருக்கிற) இப்பிரபஞ்சம் ஸத்தியமன்று. இதற்கோர் நிலையில்லை—(பிர்ம்மமென்கிற ஆதிசேஷனால் தரிக்கப்படுகின்ற) இதற்கு ஒரு ஆதாரமுமில்லை. இதற்கோர் இறை இல்—(ஸத்திய ஸங்கல்பனாய் ஸர்வேசுவரனாயிருக்கின்ற என்னாலாளப்படுகின்ற) இதற்கு ஈசுவரனேயில்லை. என்று பிச்சுரைப்பார்—என்று அறியாமற் பிதற்றுவார்கள்.

9. தன்னறியாது—ஆத்மாவைக்காணமாட்டாமல். தீம்பால்—ஹிம்ஸையால். அடுந்தொழிலராவர்—வதைக்குஞ் செய்கையை யுடையவராவார்.

10. இட்டாத காமத்தை யுன்னி—எட்டாத விஷயங்களிலெல்லாம் ஆசைகொண்டு. அறிவின்றிப் பாவத்தால் இட்டபொருள் வாங்கி—அறிவில்லாமல் பாவத்தால் அந்நியாய ஆர்ஜிதமான பொருளைப் பெற்று. அல்விரதம் சேர்ந்து—சாஸ்திரத்திற் சொல்லப்படாத விரதங்களையெல்லாம் ஏறிட்டுக்கொண்டு. உழல்வர்—வீணுக்கு அலைவார்கள்.

11. காமபோகம் பரமாக்கண்டு—காம போகமே பெரும்பேறாக நினைத்து. ஏமம் இதுவல்லது இலையென்று அறுதி மேவுவர்—புருஷார்த்தம் இதுவன்றி வேறொன்றும் இல்லையென்று தீர்மானங்கொண்டு விடுவார்கள்.

12. காமஞ்சேர் ஆக்கை சதங்களாற் கட்டுண்டு—ஆசையென்கின்ற பாசங்கள் பலவற்றால் கட்டுப்பட்டு. கைவளர்ந்து—அதிகரித்து. அநியாய அத்தத்தை—அக்கிரமமான திரவியத்தை.

14. இறைவன் நான்—நான் ஈசுவரன். போகி—ஸுகி. சித்தன்—ஸ்வதஸ்ஸித்தமாயிருப்பவன். எவன்—எவன்.

15. யெசிப்பேன்—யாகஞ்செய்வேன். கொடுப்பேன்—தானஞ்செய்வேன். நனி யுகப்பேன்—அதனால் மிகவும் ஸந்தோஷிப்பேன். மோகஞ்சார்ந்தவர்கள்—அக்ஞானங்கொண்டவர்கள். நாறுநெஞ்சு ஓடி—அநேக விதமான மனக்கவலை கொண்டவர்களாய். கொலைந்து—மரித்து.

16. தம்மைத்தாம் சம்மதிப்பார்—தங்களைத்தாங்களே புகழ்ந்துகொள்வார்கள். தாம் முயலார்—கல்வி, செல்வம், குடிப்பிறப்பு இவைகளால் தங்களைக் குறைவற்றவர்களாக நினைத்துக்கொண்டு யாதொரு வியாபாரமுஞ் செய்யமாட்டார்கள். சேமவிதி சேராது யசிப்பர்—சாஸ்திரத்திற் சொன்ன நல்ல விதியை யனுஷ்டிக்காமல் வேறுவிதமாக யாகஞ்செய்வார்கள்.

17. ஆங்காரம்-(ஒருவருடைய அபேக்ஷையில்லாமல் நானே ஸர்வமும் செய்கிறேன் என்று) அகங்காரமும், வன்மை—(நானே எதையுஞ் செய்யவல்லேன் என்று) வலிமையும், செருக்கு-(இப்படியெல்லாமிருக்கிற எனக்குச் சமமாய் ஒருவனுமில்லையென்று) கொழுப்பும், காமம்—(எனக்கு எல்லாங்கிடைக்குமென்று) விருப்பும், தீங்கார் குரோதம்—(எனக்கு யாராகிலும் தீங்கு நினைத்தால் அவர்களை அதஞ்செய்வேனென்று) தீமை

தங்கிய கோபமும், சேர்ந்த அவர்—சேர்ந்த அவர்கள். தம் பிறர்கள் தேகத்துச் சார்ந்தவெனை—தம்முடைய தேகத்திலும், பிறருடைய தேகத்திலுமிருந்துகொண்டு ஸகலமும்செய்விக்கின்ற ஈசுவரனை என்னை. அருயைச் சுடரால்—அழுக்காறென்னுந் தீயினால். வெறுப்பார்—பகைப்பார்கள்.

18. உழலும் இப்பவத்தில் - (பிறப்பு. இறப்பு, என்று) மாறி மாறிப்புரண்டுவருகின்ற ஸம்ஸாரத்தில். ஆசுரமாம் யோனியவை தன்னிடையே என்றும் எய்தத் தள்ளுவேன்—அசுர யோனிகளில் தானே எப்போதும் பிறக்கும்படி தள்ளிவிடுவேன். [அந்தந்தப் பிறப்புக் கிடைக்கும்படியான காரியத்தைச் செய்யும்படி அவர்களுக்கு நானே புத்தியைத் தருவேன் என்றபடி.]

20. காமம், குரோதம், லோபம என்னும இம்மூன்றும் அசுரஸ்வபாவமென்னும் பெரியநரகத்துக்குவாசல்களாகப் பொருந்தியிருக்கின்றன. இவைகள ஆத்மாவுக்கு ஈனமான நாசத்தைச செய்பவைகள். ஆதலால் அர்ச்சுனா! நீ இவற்றால்வரும் அனர்த்தத்தை அதிவிரைவில் கடிந்து விலக்கு என்பது இச்செய்யுளின் கருத்து.

21. தன் நன்மை யாசரிக்கத் தன்மைப்பரகதியாம் இந்நன்மை சேரும்—ஆத்மாவுக்கு நன்மையைசசெய்ய

6

அதனால் தன்தன்மையான பரகதியென்கிற இந்த நன்மையையும் அடைவான். [என்றால், என்னையறிந்து எனக்கனுகூலமான யத்தனங்களைச் செய்து பிறகு என்னையே பரகதியாக அடைவானென்பதாம்.]

22. இட்டம—இஷ்டம். சேரான் சுகம்—இகத்தில் யாதொரு சுகத்தையும் அடையமாட்டான். சாஸ்திர விதியை விட்டுத் தன்னிஷ்டமான வழியில் நடப்பவன் ஒருவித ஸித்தியையும் அடையமாட்டான். இம்மையில் அவனுக்கு ஸௌக்யம் கிடையாது. மறுமையில் பரகதியாகிற மோக்ஷமும் அவனுக்கு இல்லை, என்பது இச்செய்யுளின் தாத்பர்யம்.

23. மன்னிச் செயுமதுவும்—கைக்கொண்டு செய்யத்தக்கதும். மற்றதுவும்—செய்யத்தகாததும். அறிவுதன்னில்—அறிகிற விஷயத்தில். விதானம்—விதிக்கப்படுவது. இயல்—செய்.

## அத்யாயம் 17.

## சிரத்தாத்ரய விபாக யோகம்.

1. ஓவா—நீங்காத. இருப்பேது—நிஷ்டையென்ன? [சாஸ்திர முறைதவறிச் சிரத்தையோடு யாகஞ்செய்ப

வர்களின் ஸ்திதியென்ன, ஸத்த்வத்திலா, ரஜஸ்ஸிலா, தமஸ்ஸிலா? என்றபடி.]

2. ஐயன்—கண்ணன். மெய்யமருந் தன்மையால்—சரீரத்தினது தன்மையினால். [தன்மையாவது பழைய வாஸனையின்படி அந்தந்த வஸ்துக்களிலுண்டாகும் ருசி. எதில் ருசி பிறக்கின்றதோ அதன்பால் சிரத்தையுமுண்டாகின்றது. இது என் இஷ்டத்தைக் கைகூடச் செய்யும் என்ற நம்பிக்கையால் ஸாதனத்திலுண்டாகுந் த்வரை சிரத்தையெனப்படும். வாஸனை, ருசி, சிரத்தை ஆகிய இம்மூன்றும் குணங்களின் ஸம்பந்தத்தாலுண்டாகும் ஆத்ம தர்மங்களாம் என்று அறிக.]

3. நெஞ்சுக்கு அனுகுணமாய்—உள்ளத்துக்குத் தக்கபடி. [அந்தக்கரணம் எவ்விதமான குணத்தோடு சேர்ந்திருக்கின்றதோ அந்தந்தக் குணவிஷயமாகவே சிரத்தையுமுண்டாகுமென்பதாம்.] சிரத்தையுருவாம் புருஷன்—புருஷன் சிரத்தையின் விகாரமாக விருக்கின்றான்.

4. சத்துவத்தர் அமரர் சார்வு—சத்துவகுணம் விஞ்சியிருப்பவர்கள் தேவர்களை யாராதிப்பார்கள். மத்தியத்தர்—இடைக்குணத்தவரான ராஜஸர்கள். புன்மைத் தமோ குணத்தர் பூதம் பிரேதகணந்தன்னைச் சமைந்த

அணைவர்—அற்பமான தாமஸகுணத்தை யுடையவர்கள் பூதகணங்களையும் பிரேதகணங்களையும் விரும்பி ஆராதிப்பார்கள்.

5, 6. டம்பம், அஹங்காரம், காமம், ராகம் என்பவற்றோடு கூடி சாஸ்திரத்தில் சொல்லாத தவம் முதலியவற்றைக் கோரமாய்த் தீங்காகுந் திண்மை செறிந்து செய்யத்தொடங்கி, அதனால் சரீரத்திலுள்ள பிருதிவி முதலிய பூதஸமூகத்தையும் வருத்தி நின்று, அச்சரீரத்தினுள் ஜீவனாகப்பொருந்தியிருக்கின்ற என்னையும் பற்றின்றி மிகவும யார் வருத்துகினறார்களோ அவர்கள அசுர நிச்சயமுள்ள பாபிஷ்டர்கள் என்று நீ அறிவாய் என்பது இவ்விரண்டு செய்யுட்களின் தாத்பர்யம்.

7. ஊண்—உணவு. எச்சம்—யாகம். எய்ந்த தவம்—பொருந்திய தவம். உகப்பாம்—பிரீதியாம். ஆஹாரம், யாகம், தவம், தானம் இவைகளுக்கு ஸத்வமுதலிய குணங்களின் சேர்க்கைக்குத்தக்கபடி யுண்டாகும் பேதத்தைச் சொல்லுகிறேன். கேள் என்பது கருத்தாகக் கொள்க.

8. வாணாள்—வாழ்நாளையும், அதாவது ஆயுஸ்ஸையும், மனந்தெளிவு—மனத்தின் நைர்ம்மல்யத்தையும் அதாவது ஞானத்தையும், வலி—பலத்தையும், நோயா

மை—ஆரோக்யத்தையும், சுகம்—ஸுகத்தையும், உகப்பை—பகவத் பிரீதியையும், பொங்குவித்து—விருத்தி செய்து. மனோஹரமாய்—மனத்திற்கினியதாய்.

9. காழ்த்து—காரமுள்ளதாகி. கைக்கொதித்து—அதிக உஷ்ணப்பட்டு. கடுகாய்—தீக்ஷ்ணமாய். அழல் விளைத்து—தாபத்தையுண்டுபண்ணி. சூழ்க்கும்—விருத்திபண்ணும்.

10. காலங்கழிந்து—நாட்பட்டு. இரதங்கழிந்து—ரஸமெல்லாங் கெட்டுப்போய். துர்க்கந்தித்து—கெட்ட நாற்றமுடையதாகி. எச்சிலாய்—பெரியவர்களைத் தவிர மற்றவர்களால் புஜிக்கப்பட்டுச் சேஷமானதாய். அமுதுக்காகாத—போஜனத்துக்கு அர்ஹமில்லாத.

11. அதில் பயனை வேண்டாது—அதிற் பலனை யபேக்ஷியாமல். வேத விதி மேவி—வேதத்திற் சொன்ன விதியை யனுஷ்டித்து. முதற்குணத்தில்—ஸத்வ குணத்தில்.

12. பயன் நினைந்து—பலனை யபேக்ஷித்து. பரதர் தலைவா—பரதகுல சிரேஷ்டனே. அர்ச்சுனனே. இடைக்குணத்தது—ராஜஸயாகம்.

13. விதியற்று—நல்லொழுக்கமுடைய வித்வான்களான பிராமணோத்தமர்களால் விதிக்கப்படாமல், அவியற்று—அன்னதானம் முதலியவை செய்யப்படாமல். மந்திரம்விட்டு—மந்திர லோபமாய். தக்கணை—தக்ஷிணை. கோலும்—செய்யப்படுவதாகும்.

14. காயம—சரீரம். சொலவு சொல்; செலவு என்பது போன்ற தொழிற்பெயர்.

15. மிகவுணர்ந்தோர்—பண்டிதர்கள். மெய்ம்மை—சரீரசுத்தி, அதாவது தீர்த்த ஸ்நாநமுதலியவைகளைச் செய்தல். காயத் தவம—சரீர த் த.மாம.

16. அஞ்சாமை—பிறர் அஞ்சாத விதமாய், அதாவது பிறருக்கு மனவருத்த முண்டாகாத விதமாய். மெய்—உண்மை. உகப்பு—பிரியம். இதம்—ஹிதம். எஞ்சாத—குறையாத

17. மனந்தெளிதல்—மனம் தெளிவடைதல், அதாவது சின முதலியவை யற்றிருக்கை. நன்கறிதல்—பிறருக்கு க்ஷேமமுண்டாவதை யறிந்து அதைச்செய்வதில் ஆசை கொண்டிருக்கை. வாயுமையை மீட்டல்—வாக்கைப் பேசவொட்டாமல் அடக்குகை. நினைவு மனஞ்சோர நிறுத்தல்—மனோவியாபாரத்தைத் தியானிக்கப்

படும் விஷயத்தில் தானே நிறுத்துகை. இனமியல்வு சேராத தூய்மை—ஆத்மாவை யொழிந்த இதர விஷயங்களில் சிந்தை போதலில்லாத தூய்மையையுடைமை. சித்தத்துச் சேர்தவமென்று—மனத்தைப்பற்றிய தவமென்பதாக.

18. ஆர்வம் உயர்ந்து—பகவானுக்கு ஆராதனமென்பதாக அன்பு மேலிட்டு. பயனை யுள்ளொழித்து—பலத்தில் மனமின்றி. உய்யுமவர்—உஜ்ஜீவிக்கவல்ல பெரியோர்கள்.

19. நலம் நினைந்து—பலத்தை யபேக்ஷித்து. கொண்டாடி நன்கு இறைஞ்ச—தன்னைக்கண்டு பிறர் ஸந்தோஷித்துக்கொண்டாடி நன்றாக நமஸ்காராதிகள் செய்யவேண்டுமென்று. நில்லாது—சாசுவதமாயிராது. சலித்து மாய்ந்து அறும்—சலிப்புற்று அழிந்து ஒழியும். பீடுறமே யெய்ந்த தவம் என்றார். ஸ்வர்க்காதிகளை யிச்சித்துச் செய்யும் தவம் என்றற்கு.

20. பீடை—துன்பம். பிறர்கேடுகூட—பிறர்க்குந் துன்பம் உண்டாக. கடைக்குணம்—தாமஸகுணம்.

21. வரும்பாது என்பதனை விரும்பாது என்றுதிருத்திக்கொள்க. இடம் காலம் நலங்கொள்பவனைத்

தேறி—தகுந்த இடைத்தையும், தகுந்த காலத்தையும், தகுந்த பாத்திரத்தையும் நன்கு தெரிந்து.

22. நீண்டு உபகாரங்கொளவும்—பிரதிபிரயோஜனத்தைப் பெறுவதற்காகவும். புன்பொருள்கள்—கெட்ட திரவியத்தை; அதாவது அநியாய ஆர்ஜிதமான பொருள்களை. இடைக்குணம்—ராஜஸகுணம்.

23. ஆசின்மை பாராது—குற்றமின்மையைப் பாராமல், அதாவது கால்கழுவுதல் முதலிய உபசாரத்தைக் கவனியாமல். அவமதித்து—அவமரியாதை செய்து. மீதரிப்பது—அதிகமாகப் பொருந்துவது. பிற்குணம்—தாமஸகுணம்.

25. ஆதலால் பிராமணர்களுக்கு, ஓமென்றுரைத்தே யாகம், தானம், தவம் முதலியவைகளெல்லாம் வேதஞ்சொல்லும் விதியின் பிரகாரம் நடக்கும் என்க.

26. முத்தி நினைந்து—மோக்ஷத்தை யபேக்ஷித்து. 'மெத்தென்றுரைக்குந்தரம்' என்பதனை 'தத்தென்றுரைக்குந்தரம்' எனத்திருத்திக்கொள்க. யாம் கண்ட இரண்டுபிரதிகளிலும் 'மெத்தென்றுரைக்குந்தரம்' என்றே காணப்பட்டமையால் மூலபாடத்தைமாற்றவில்லை. எனினும், பொருள் இனிது காணப்படாமையோடு

மோனை நயமுஞ் சிதைதலால் யாம்கொண்டபடி 'தத்தென்றுரைக்குந்தாம்' என்று கொள்ளுதல் நலமாம்.

27. உண்மையிலும் - இருக்குந்தன்மையிலும். ஒண்மையிலும்—ஸாதுத்தன்மையிலும். மால்—இந்திரன். விஷ்ணு என்றுரைத்தல் சிறவாது.

29. விருப்பமின்றி—சிரத்தையில்லாமல். ஓமம்—ஹோமம். தான்சத்தாய் என்பதனைத் தானசத்தாயென்று திருத்திக்கொள்க. மாணெறி வழியாகா—மோக்ஷத்தையடைய வழியாகமாட்டா. சாயத்தின் நன்காகா—ஸம்ஸாரத்திலும் நன்மையாகமாட்டா.

---

## அத்யாயம் 18.

## மோக்ஷோபதேச யோகம்.

1. சன்யாசம் - ஸந்யாஸ சப்தத்திலும். தியாகத்தில்—தியாகமென்கின்ற சப்தத்திலும். பிறிவு—பிரிவு, அதாவது வேறுபாட்டையும். "பிறியார் பிறிவேதென்னும் பெரியோய் தகவோ வென்னும்" என்னும் இக்கல்வியிற் பெரியார் வாக்கிலும் பிறிவு என்றசொல்பிரயோகிக்கப்பட்டிருத்தலை யறிக. ஒருமை—ஐக்கியம்.

2. காமக்கருமங்கள் கைவிடுதல்—காமியகருமங்களை அறவே கைவிட்டு விடுதலை. எக்கருமப்பேறும் இகழ்வு—நித்தியம், நைமித்திகம் என்கிற எல்லாக் கர்மங்களினுடைய பலனையும் யபேக்ஷியாது விடுதலை. தியாகமெனச்சொல்வர்—தியாகமென்று சொல்லுவார்கள். [இங்கே சாஸ்திரோக்தமான த்யாகம், காம்யகர்மங்களைச் சுத்தமாய்க் கைவிடுகையென்றும், ஸர்வ கர்மங்களிலும் பலாபேக்ஷையற்றிருக்கையென்றும் விவாதத்தைக்காட்டத் தொடங்கினவர், ஓரிடத்தில் ஸந்நியாஸ சப்தத்தையும் மற்றோரிடத்தில் த்யாக சப்தத்தையும் பிரயோகித்தார். இதனால் த்யாக ஸந்யாஸ சப்தங்களுக்குப் பொருள் ஒன்றேயென்று அங்கீகரிக்கப்பட்டதாகத்தெரிகிறது.]

3. எதம்போல் கன்மம் இகழப்படும் என்றுபோதா சிலருரைப்பர்—கபிலமதஸ்தர்களும், அந்த மதத்தையனுஸரித்த சில வைதிகர்களும யக்ஞம் முதலிய கர்மங்கள் ராகம் முதலிய தோஷங்களைப்போல் பந்தஹேதுவாகையால் மோக்ஷார்த்தியானவனால் கைவிடப்படுமென்று சொல்வார்கள். எச்சந் தவந் தானம் ஈங்கு இகழ்வது அல்லவெனா—யக்ஞந் தவந் தானம் கைவிடத்தக்கதன்றென்று.

4. அறுதி—நிச்சயம். [தியாகம் மூன்றுவகைப்படும்; பலத்யாகம், கர்மத்யாகம், கர்த்தாத்யாகம் என. கர்மத்

தால்வரும் சுவர்க்கம் முதலிய பலம் எனக்குவேண்டா வென்பது பலத்யாகம்; என்பயனுக்காக இந்தக்கர்மம் என்னால்செய்யப்பட்டது என்கிற அபிமானத்தை யொழிக்கை கர்மத்யாகம்; ஸர்வேசுவரனே கர்த்தா வெனபதைத்தெரிந்து தான் கர்த்தாவல்லனென்று மதிக்கை கர்த்தாத்யாகம்.]

5. அவை - அந்த யக்ஞ தவம் தானமுதலிய வர்ணாசிரமத்தைச் சேர்ந்த கர்மங்களெல்லாம். அறிவினர்க்கும் பாவனமாம்—மனனசீலர்களான ஞானிகட்கும் பரிசுத்த கரங்களாம். [என்றால், வாழ்நாளுள்ளவரைக்கும் உபாஸனஞ்செய்கின்ற மோக்ஷார்த்திகளுக்கு உபாஸனத்தைக் கைபுகுதவொட்டாமல் விரோதிக்கின்ற பழையகர்மங்களைப் போக்குமவைகளென்பது கருத்து.]

6. இக்கருமமான இவை என கருமமெனலிக்கு அமரும் சங்கம் பிகுபயன்கள் ஒக்க விடுத்து—(இப்படி உபாஸகர்களுக்குப் பரிசுத்திகரங்களாகையால் உபாஸனம்போல) இந்த யக்ஞயாகாதி கர்மங்களான இவைகள் என் ஆராதன கர்மங்களென்று நினைத்து அக்கர்மங்களினிடத்திற் பொருந்திய மிகுந்த பற்றையும் பலன்களையும் ஒருங்கே விடுத்து. ஆய்ந்த அறுதி—நிச்சயமான தீர்மானம்.

7. நியதமாம் இந்தக் கருமங்கள்—நித்திய நைமித்திகங்களான மஹாயக்ஞாதிகள். விடவொண்ணாது—விடக்கூடாது. இவற்றை—ஞானத்தை விருத்திபண்ணித்தருகின்ற இக்கர்மங்களை. மோகத்தால் தான் விடுதல்—(இவை கட்டுப்படுத்துமவைகளென்று) அக்ஞானத்தால் விட்டுவிடுவது. [அக்ஞானம தமஸின் காரியமாகையால் தமோகுணத்தால் வருவது என்றுரென்க.] அக்ஞானமாவது—ஞானத்துக்கு விரோதியான விபரீதஞானம். [சரீரத்தை யக்ஞ சேஷத்தால் வளர்த்து வந்தால் அது நல்ல ஞானத்தையுண்டாக்கும். அப்படி யக்ஞ சேஷமல்லாதவைகளாலே சரீரத்தை வளர்த்தால் அது விபரீத ஞானத்தை யுண்டுபண்ணும்; பிர்ம்ம ஸாக்ஷாத்காரரூபமான ஞானம் ஆஹார சுத்தியைப்பொருத்தது. ஆகையால் மஹாயக்ஞம் முதலிய நித்ய நைமித்திககர்மம் பிரயாணமளவும் பிரம்ம ஞானத்துக்காக வேண்டியிருக்கிறபடியால் விடலாகாது என்றுரென்க.]

8. துக்கமெனெ—(கர்மமானது பரம்பரையாக மோக்ஷத்தை ஸாதிக்குமாயினும்) துக்கரூபமான திரவிய ஸம்பாதனத்தாலே ஸாதிக்கவேண்டியதாயிருக்கின்றதென்று. கன்மத்தை—மஹாயக்ஞந் தொடக்கமான ஆச்ஸிரம கர்மத்தை. உடல்வருத்தம்—காயகிலேசத்தா

லும், மிக்க பயத்தால்—(மனத்திற்கு வருத்தத்தையுண்டு பண்ணுமென்று) பயத்தாலும். செய்யாவிட்டவன்—செய்யாமல் விட்டவன். வாய்ந்த இடைக்குணத்தான்—ரஜோ குணத்தால் வந்த யாகத்தைச் செய்தவனாகின்றான். அப்பயனும் எய்த அறிவுபெறான்—அத்தியாகத்தின் பயனைப்பொருந்திய ஞானநிஷ்டையை யடையமாட்டான்.

9. நியதக் கருமத்தை—நித்திய நைமித்திகமான வர்ணாசிரம கர்மங்களை. நேர்ந்து—எம்பெருமானுடைய ஆராதனரூபமென்று அறிந்து. இயல்வென்று—அவற்றைச்செய்வதே பயனென்று கருதி. சங்கம்—எனது என்கின்ற பற்றையும். பயன்—கர்மப்பயனையும். துறப்பார் தியாகம்—கைவிடுவாரது தியாகமானது. முற்குணத்ததாம்—ஸாத்விகமானதாம்.

10. தீவினையில் நல்வினையில் வெறுப்பு சங்கமவை ஒவி இருப்பு எய்தும்—தீயகருமத்தில் வெறுப்பும் நல்வினையில் பற்றுமாகிய இவற்றை விட்டு இருப்பான். [தீவினையென்றது இங்கே அனிஷ்டபலத்தைத் தருங் கர்மத்தை. நல்வினை யென்றது சுவர்க்கம், புத்திரன், பசு, அன்னம் முதலிய பலத்தைத் தருங்கர்மத்தை. எந்தக்கருமத்திலும் எனது என்கின்ற அபிமானமில்லாமையாலும், பிரம்மத்தை யொழிந்த ஏனைய பலன்களைக்

கைவிட்டமையாலும், நான் செய்தேன் என்கின்ற கர்த்திருத்வத்தை விட்டமையாலும் அவைகளைச் செய்யுமிடத்தில் விருப்பு வெறுப்புக்களிரண்டுஞ் செய்யமாட்டானென்க. இங்கே அனிஷ்டபலத்தைத் தரும் கர்மமாவது. தன்னாலும் அறியப்படாமல் செய்யப்பட்ட பாபகர்மமாம்.]

11. நன்றும்படி துறந்தானென்று—சாஸ்திரங்களிற் சொன்னபடி நன்கு துறந்த தியாகியென்று. [தேகத்தைத் தரிப்பதற்காகப் புசித்தல், பானஞ்செய்தல், முதலிய கர்மங்களும் மற்றும் அதைச்சேர்ந்த கர்மங்களும் ஒழிக்கப்போகாமையால் அதற்காக மகாயக்ஞம் முதலிய அனுஷ்டானமும் ஒழிக்கப்போகாது என்பது பற்றிக், 'கருமமெலாங் கைவிடுதலரிதாகும்' என்றாரென்க.]

12. நன்றும்—சுவர்க்காதிகளான நற்பலம் என்றும். தீதும—நரகாதிகளான அனிஷ்டபலம் என்றும், கலந்து நண்ணும் பலம்—புத்திரன், பசு என்கிற இப்படிப்பட்ட நன்றுந் தீதுங்கலந்த பலமென்றும், பலமூன்றாய்—பலன்கள் மூன்று விதமாய், துறவாது உடன்சென்றார்க்கு—கர்த்திருத்வத்தையும், எனதென்கிறஅபிமானத்தையும், கருமப்பயனையும் கைவிடாமற்செல்பவர்கட்கு. கருமத்தில் ஒன்றில்—கருமானுஷ்டானத்தில் பொருந்

தினால், ஒன்றும்—உடனே பலிக்கின்றது. ஒருமைப் படத் துறந்தார்க்கு—கர்த்திருத்வாதிகளை யொருங்கே கைவிட்டவருக்கு, பயன்சாரா—இப்பயன்கள் உண்டாக மாட்டா. 'பலமூன்றுப் பொனறும்' என்றிருப்பதனை பலமூன்று—மொன்றும் எனத்திருத்திக்கொள்க. இங்ஙனம் கொள்ளாவிடின் நன்கு பொருள்படாமையோடு மோனையுமில்லாது போமென்க.

13. ஆரணம்—வேதம். அறிதி—அறிவாயாக. ஐவகை சேர் காரணங்கள்—ஐந்துவகைப்பட்ட காரணங்கள்.

14. உடல்—(மகா பூதங்களின் தொகையான) சரீரம். உயிராங் கர்த்தா—கர்த்தாவென்கிற ஜீவாத்மா. கரணம்—வாக்குமுதலிய ஆறுகரணங்கள். ஒற்கமிலா—அடக்கமில்லாத. சேட்டைபல—நாநாவித சேஷ்டைகளையுடைய, பஞ்சமம—(பிராணம், அபாநம், வியாநம், உதாநம், ஸமாநம் என்று) ஐந்து வாயுக்கள். தெய்வ இறை—அந்தர்யாமியான பரமாத்மா.

15. காயத்தால், வாக்கால், மனந்தன்னால்—காயம் வாக்கு, மனம் என்கின்ற முக்கரணங்களாலும், நல்வினைக்கும் தீவினைக்கும் சாஸ்திரத்தில் விஹித்தமான தும் நிஷித்தமான துமான எல்லா நல்வினை தீவினைகளுக்கும். இவை ஐந்தும்—சரீரம், ஜீவாத்மா, கரணம,

வாயு, பரமாத்மா வென்னும் இவையைந்தும், ஏதுவாம்—காரணமாம். [என்றால்—சரீராதிகரண ஸகிதனைக் கொண்டு பரமாத்மா கர்த்தாவாகின்றானென்று தாத்பர்யம்.]

16. ஈசனால்—பரமாத்மாவின் அனுமதியினால். வெறுஞ்சீவனை—(பரமாத்மாவை முன்னிட்டுக்கொண்டல்லது) ஒன்றுஞ்செய்ய சக்தியற்ற ஜீவாத்மாவை. தன்மதி—தர்ப்பத்தி.

18. அறிவு—செய்யவேண்டுங் கர்மத்தையறியும் ஞானம். அறியப்படுங் கன்மம்—செய்யவேண்டுவதாக அறியப்படுங்கர்மம். அறிவான்—அதையறியுமவன். விதிமூன்றாகும்—என்று கர்ம விதியானது மூன்று வகைப்பட்டதாகும். [என்றால், அறிவு, அறியப்படுமது, அறியுமது என்று இம்மூன்றுடன் கூடியது ஜ்யோதிஷ்டோமம் முதலிய கர்மங்களின் விதியென்பதாம்.]

19. காண் உணர்வும்—செய்யவேண்டுங் கர்மத்தையறியும் ஞானமும், கர்மமும்—செய்யப்படுங்கர்மமும். கர்த்தாவும்—அதை யனுஷ்டிப்பவனும் ஆக இம்மூன்றும். மும்மூன்றாய்ப் பேறுங்குணத்திற்பிரியும்—ஒவ்வொன்றும் மூன்று விதமாய் ஸத்வாதிகுணங்களுக்குத் தக்கபடி பிரிவுடையதாகும்.

20. வண்ணாச்சிரமம—இனவெதுகை. வண்ணாச்சிரமமென்றும்பாடம். சேறறிவு—ஸாரமான அறிவு, அதாவது உத்தமமான ஞானம். 'சேறுபடுமலர்' எனச்சிந்தாமணியிலும், 'சேதனமென்னுமச் சேறகத் தின்மையாற்—கோதென்று கொள்ளாதாங் கூற்று.' என நாலடியாரிலும் சேறு என்னுஞ்சொல இப்பொருட்டாய் வருதலையறிக. ஸார க்ஷேத்திரம் சேறையென வழங்கப்படுதலுங் காண்க. 'சேரறிவு' எனக்கொள்ளின் எதுகை நயமில்லையாம். பிராம்மணனென்றும, க்ஷத்திரியனென்றும், பிரம்மசாரியென்றும, கிரஹஸ்தனென்றும் இப்படி நானாவிதமாய்ப் பிரிக்கப்பட்டுக் கர்மாதி காரியங்களாயிருக்கிற ஸகல பூதங்களிலும் ஆத்மாவென்னும் பொருள், பிராம்மணாதி பேதங்களுக்குத் தக்கபடிபிரிக்கப்படாமல், ஞானமே வடிவாயும், அழிவற்றதாயும, பலனைப்பெறுவதற்குத் தகாததாயும் இருக்கிறதென்று எந்த ஞானம் அறிகின்றதோ அது ஸாத்விகஞானமாமென்று தெளிவாயாக. என்பது இச்செய்யுளின் தாத்பர்யம்.

21. உயிரும் வெவ்வேறாய்க் கூடுமென—ஆத்மாக்களும் வெவ்வேறாய்ப் பிரிக்கப்பட்டுப் பலன்களை யனுபவிப்பதற்கு யோக்கியமானவைகளாய்ப் பொருந்துமென்பதாக.

22. ஏதேனும் ஓர் கருமத்து—பிரேதம், பூதம் முத லியவைகளை யாராதிப்பதற்காகச் செய்யும் ஏதாவது ஒரு கருமத்தை. எல்லாம் பெறலாமென்று—ஸகல பலன்களையும் அடையலாமென்று. ஆதே நசை பண் ணி—அதையே நம்பிக்கொண்டு. மெய்ம்மை யடையா வெறு மறிவு—உண்மையில்லாத அதாவது பொய்யான வெற்றறிவை.

23. உகப்பு வெறுப்பன்றி யுயர்நசையுமற்றே—(தன் வருணாசிரமங்களுக்குத் தக்கபடி நான்செய்தேனெ ன்ற) அபிமானமில்லாமலும், (பிறருக்குண்டான கீர்த் தியில்) த்வேஷமில்லாமலும். (தனக்குக் கீர்த்தியுண் டாக வேண்டுமென்ற) மிக்க ஆசையில்லாமலும். பய னில் ஆசையொழிந்து—பலத்தில் அபேக்ஷையின்றி.

24. காம நசை தன்னால்—பலத்தையடைய வேண் டுமென்ற இச்சையினால். ஆயாசம்—சிரமம். [வெகு கஷ்டமாயிருக்கிற இந்தக்காரியம் என்னால் செய்யப் படுகிறது என்ற அபிமானத்தோடு செய்யப்படுங் கர்ம ம் ராஜஸமென்னப்படுமென்பதாம்.]

25. துக்கத்தொடர்ச்சி—கர்மஞ் செய்யும்பொழுது உண்டாகும் துக்க பரம்பரையையும், பொருள் நாசம்— பொருட்செலவையும், பீடை—பிராணி ஹிம்ஸையை

யும், இயல்வலி—கருமத்தை முடிக்கும்படியான ஸாமர்த்தியத்தையும், ஒன்றினையுந் தக்கறியான்—ஒன்றையுந் தக்கபடி பாராதவன். மோகத்தால்—அஞ்ஞானத்தால், பாமபுருஷன் செய்கிறுன என்ற ஞானமில்லாமல்.

26. ஆர்ந்தபயன் ஆசையது விட்டு—பொருந்திய பலனிடத்தில் பற்றைவிட்டு, ஆங்காரந் தீர்ந்து—செய்கிறேனென்ற அபிமானமுமில்லாமல். திடனுய் முயற்றி சென்றியன்று—தைரியமுடையவனுய் உத்ஸாஹத்தோடுகூடி. தைரியம்—இடுக்கணழியாமை, அதாவது கருமஞ்செய்யதொடங்கியது முதல் முடியுமளவும் நேரிடுந் துக்கத்தை யனுபவித்தல். உத்ஸாஹமாவது—பிரயத்தன ஸஹிதமான மனத்துடன் கூடியிருத்தல். சேர்ந்துவரும் பேர் இழவில்—கைகூடிவருவதிலும், பெரிய நஷ்டம் வருவதிலும். [யுத்தமுதலிய கருமத்திலும் அதற்காகச்செய்யும் பொருள்தேடல் முதலிய கருமத்திலும் ஸித்தியுண்டானுலும் உண்டாகாவிட்டாலும்.] பீடுடைய கர்த்தா—பெருமையையுடைய கர்த்தா. இங்கே பீடு என்றது சித்தவிகாரமடையாமையை.

27. புகழ்விரும்பி—கீர்த்தியை யிச்சித்து, புன்பயனை வேண்டி—அற்பமான கர்மபலனை யபேக்ஷித்து, பொருளை வவ்வி—செலவுபண்ணவேண்டிய பொருளைச் செலவிடாமல் இறுகப்பிடித்து, பீடையினை மேவி—

வருத்தத்தையடைந்த. சுத்தியுறுதா—ஆசாரமில்லாமல், உட்களிப்பு சோகத்து உறுங்கர்த்தா—யுத்தமுதலிய கர்மங்களாலுண்டாகும் ஸித்தியிலும், அஸித்தியிலும் மனசசந்தோஷமும் துக்கமுங்கொண்டாடுங் கர்த்தா வானவன்.

28. நன்மைத் தகான்—சாஸ்திரோக்தமான கர்ம த்தைச் செய்யத்தகுந்த யோக்கியதையற்றவனும். அறிவு நண்ணான்—கல்வியறிவு பொருந்தாதவனும். முயற்றியுறான்—முயற்சியில்லாதவனும். வன்மைச் சடன் மறத்தில் மன்னுவான்—வலிய சூன்னிய முதலியவற்றைச் செய்யும் விஷயத்தில் இசைவுள்ளவனும். நெடுநவாதை நிலையுங்கர்த்தா—பிறருக்கு நெடுநாளாய் அனர்த்தத்தைத் தேடுங் கர்த்தாவானவன்.

29. புந்தி—பகுத்தறிவு. திண்மை—இடுக்கணழியாமை. குணப்பிரிவால்—ஸத்வம் முதலிய குணவேறுபாட்டால். [புத்தியிலும் தைரியத்திலுமுண்டான மூன்று பேதத்தையும் சொல்லக்கேள் என்பதாம்.]

30. 'துக்க வியலறமும்' என்பதனை அக்க வியலறமும் எனத்திருத்திக்கொள்க. துக்க வியலறம் என்று எட்டிலுள்ள பாடம் 'அப்யுதயஸாதன பூததர்மம்' என்ற ஸ்ரீ பாஷ்யத்தின் அபிப்பிராயத்துக்கு விரோதமாத

லோடு செய்யுளின் மோனையிலக்கணத்துக்குஞ்சேராத தால் கொள்ளத்தக்கதன்று. யாம்கொண்டபாடம் ஸ்ரீபா ஷ்யத்துக்கும் செய்யுளிலக்கணத்துக்கும் ஒத்திருத்தல் காண்க. அக்க இயலறமும்—(க்ஷேமத்துக்கு ஸாதக மான) பிரவிருத்தி தர்மத்தையும், அல் அறமும்—(மோ க்ஷத்துக்கு ஸாதகமான) நிவ்ருத்தி தர்மத்தையும், ஆன்று அறியும் புந்தி—நன்றாக அறிகின்ற புத்தியானது.

31. தன்மமும்—முன்சொன்ன இருவகைத் தாம த்தையும். மற்றைய தன்மமும்—அதன் விபரீத தர்மத் தையும்.

32. எல்லாப் பொருளையும் விபரீதமாகக்காணும் புத்தி தாமஸபுத்தி யெனபதாம். [அதாவது தருமத் தை அதர்மமாயும், அதர்மத்தைத தர்மமாயும், ஸத்தை அஸத்தாயும், அஸத்தை ஸத்தாயும், பரமான தத்து வத்தை அவரமாயும், அவரமான தத்துவத்தைப் பர மாயும் இப்படி யெல்லாவற்றையும் விததியாஸமாகவே பார்த்தல்.]

33. நெஞ்சு—மனம். உயிர்—பிராணன். புலன்கள்— இந்திரியங்கள். மோக்ஷோபாயமாக எம்பெருமானை உபாஸிப்பதென்கிற யோகம் என்பார் வண்மையறி யோகம் என்றார். திருதி—தைரியம். திண்மையினால் தரிக்கும்—வலிமையோடு தரிப்பிக்கும்.

37. எது—எது. முதல் விடம்போல் இன்றது—(யோகத்தைச் செய்யத் தொடங்கும்பொழுது மிகவும் வருத்தப்பட்டு ஸாதிக்கவேண்டுகையாலும், தனியான ஆத்ம ஸ்வரூபம் முன்னே பழகாமையாலும்) முதலில் விஷம்போல் துக்கந்தருவாய். பின் அமுதம் ஒக்கும்—பிறகு (அப்பியாஸத்தின் வலிமையாலே ஏகாந்தமான ஸ்வரூபத்தை யடைவதால்) அமிர்தத்திற்கு ஸமானமா யிருக்கும்.

38. பொறிபுலனால்—இந்திரியத்தாலும், விஷயத தாலும். நிரயம்—நரகம்.

39. தோன்றுமியில—பக்குவமாகும் பொழுதும். துய்ப்பில்—அனுபவிக்கும்பொழுதும். உறக்கம் மடி ஓர்ப்பின்மையால்—நித்திரை, ஆலஸ்யம், பிரமாதம் இவைகளால். பிரமாதமாவது—செய்யவேண்டியதிற் கவனமில்லாமை. மோகசுகம்—மோகத்தை விளை விக்கும் சுகம்.

40. பூமிமிசை மானிடரில்—பூமியில் மனுஷ்யர்களி டத்திலாவது. பொன்னுலகில் இமையோர் தம்மில்—தேவலோகத்தில் தேவர்களிடத்திலாவது, பிரகிருதி முக்குணங்கள்-பிரகிருதியினுடைய முக்குணங்களையும்.

41. தன்மை அமர்குணம்—ஸ்வபாவமாயுண்டான ஸத்வமுதலிய குணங்கள். [பிராம்மணனுக்கு ஸ்வபாவத்தாலுண்டானது, ரஜஸ்ஸையும் தமஸ்ஸையுமடக்கித் தலையெடுத்திருக்கும் ஸத்துவகுணம். க்ஷத்திரியனுக்கு ஸ்வபாவத்தாலுண்டானது, தமஸ்ஸையும் ஸத்துவத்தையுமடக்கித் தலையெடுத்திருக்கும் ரஜோகுணம். வைசியனுக்குஸ்வபாவத்தாலுண்டானது,ஸத்துவத்தையும், ரஜஸ்ஸையுமடக்கிக் கொஞ்சந்தலையெடுத்திருக்கும் தமோகுணம். சூத்திரனுக்கு ஸ்வபாவத்தாலுண்டானது, ரஜஸ்ஸையும் ஸத்துவத்தையுமடக்கி மிகவும் தலையெடுத்திருக்கும் தமோகுணம் என்றறிக.]

42. சமம்—(புறக்கரணங்களை யடக்குவதென்கிற) சமம். தமம்—(அந்தக்கரணங்களை யடக்குவதென்கிற) தமம். தவம்—(போகத்தை யடக்கும்படி சாஸ்திரத்திலேற்பட்ட காயக்லேசமென்னும)தவம், சுத்தி–(சாஸ்திரோக்தமான கருமத்தைச் செய்யும்படியான யோக்கியதையென்கிற) சௌசம், பொறை—(பிறரால் தான பீடிக்கப்பட்டாலும் சித்த விகாரமடையாமலிருக்கையாகிற) க்ஷாந்தி, செய்மை—(பிறர் விஷயத்தில் மனத்தில் நினைத்தபடியே வெளியிலும் நடக்கையென்கிற) ஆர்ஜவம். ஞானம்— (பரதத்துவத்திற்கே யுரியவைகளான விஷயங்களை யறிவதென்கிற) ஞானம். உண்மையுணர்வு—ஆஸ்திக்கியம்.

43. சௌரியமும்—யுத்தத்தில் நிர்பயமாய் பிரவேசிக்கும்படியான ஸாமர்த்தியமும். ஒளியும்—சத்துருக்களால் வெல்லப்போகாமையும், துணிவும்—எடுத்த காரியத்தைத் தடைநேரிட்டபோதிலுந் தலைக்கட்டுந் திறமையும், சமத்தும்—எந்த வேலையானாலும் செய்யும்படியான ஸாமர்த்தியமும். அமர் நாணமை—யுத்தத்தில் தனக்கு மரணம் நேரிடுமென்ற நிச்சயமுண்டானாலும் புறங்கொடாமை. சீரியனாய் ஒக்க நியமிக்குமது—பெருந்தன்மை யுடையோனாய் ஜனங்களையெல்லாம் ஒருபடியாக ஆளும் ஸாமர்த்தியம்.

44. காணி—பூமி. காலி—பசு. வாணியம்—வர்த்தகம். மூவர்க்குமாளாய்ப்பேணிமுயலுமதே—முற்கூறிய மூவருணத்தார்க்கும் ஆளாயிருந்து விரும்பிப் பணிசெய்தலே.

45. தன்கருமநின்று—தன் தன் கருமத்தில் ஊன்றியிருந்து. சித்திச்சார்வகையை—பரமபதத்தையடையும் விதத்தை. "இயல்பின் விகாரமும் விகாரத்தியல்பும் .. ஐயுருபே." என்பதனால் 'சித்திச்சார்வகையை' என வலிமிக்கது. சித்திசார்வகையை யெனவும பாடம்.

46. பரம்பும்—வியாபிக்கப்பட்டிருக்கின்றான். அவனை—அந்தப்பரமாத்மாவான என்னை. [எவன்பாற் பூத

ஙகளெல்லாம் பிறந்து பிரவிருத்திக்கின்றனவோ, எவ ன் இவற்றினிடையெல்லாம் அந்தராத்மாவாய் வியா பித்திருக்கின்றானோ அந்த என்னை யாராதித்து, மனித ன் எனது அனுக்கிரஹத்தால் என்னை யடைவதென்கிற சித்தியைப் பெறுவான் என்பதாம்.]

47. தன் கருமம்—தன் தர்மமான கர்மயோகம். அல்குணத்தைச் சார்ந்திடினும்-குணமற்றதைப் பொரு ந்தியிருந்தாலும், அதாவது குணமற்றதானாலும். மிக்கி யன்ற வன்கருமமான மற்றொன்றின் நன்கதுவாம்— இந்திரிய ஜயம் பண்ணவல்ல புருஷனது தருமமான கஷ்டஸாத்யமான ஞானயோகத்தைக் காட்டிலும் சிறந்ததாம். தன்மைசேர் கன்மத்து—(இந்திரிய வியா பார ரூபமாயிருக்கையாலே பிரகிருதியைச் சேர்ந்த புருஷனுக்கு) ஸ்வபாவமாயிருக்கிற கர்மயோகத்தில்.

48. கூடப்பிறந்த கருமம்—ஸஹஜமாய் (வருத்தமி ன்றிச் செய்யக்கூடியதாய்) உள்ளகர்மமானது. குறை யுறிலும்—துக்கத்தோடுகூடியிருந்ததேயாகிலும். வீடப் படாது—கைவிடத்தகாது. [என்றால், ஞானயோகத் துக்குத் தக்கவனாயினும் கர்மயோகத்தைச் செய்யவே ண்டுமென்றபடி.] 'எரியத்தூமம் போல்' என்பதனை 'எரியைத்தூமம்போல்' எனத்திருத்திக்கொள்க. எரி யைத்தூமம்போல எல்லா முயற்றியையும் பொல் லாங்கு சூழும் என்க.

49. சன்யாசச சார்வதனுல்—ஸந்யாஸ ரூபமான வைராக்கியத்தால். வினையகன்ற மேலாம் வியப்பு மேவும்—ஸமஸ்த கர்ம நிவர்த்தி ரூபமான மேலான ஸித்தியைப் பெறுவான்.

50. செவ்வியுறுந தியானத்தின் சித்தியினைச சேர்ந்தவவன்—பிரயாணமளவும நாடோறும் அனுஷ்டிக்கப் படும் கர்மயோகத்தால் உதவி செய்யப்பட்ட ஞான யோகம் ஸித்திக்கப்பெற்றவன். எவ்வாறு பிரமமெய்தினுன்—எந்தப் பிரகாரமிருந்து (தியாந யோகத்துக்குப் பயனுன) பிர்ம்மத்தை யடைகிறுன். சுருக்க—சுருங்க.

51. கோதறு சீர்ப்புத்தி—குற்றமற்ற சிறப்பினையுடைய புத்தி, அதாவது ஆத்மாவை யுள்ளபடி யறிகின்ற புத்தி. ஓசை முதற்பொருள்களுள்ளுறவிட்டு—சப்தாதி விஷயங்களைக் கிட்டவொட்டாமல் துறந்து. ஆசை வெறுப்பு அற்று—ராகத்தையும் த்வேஷத்தையும் தவிர்ந்து.

52. தக்க தனியாமிடத்துச் சார்ந்து—தியானத்துக்கு விரோதமானவைகளொன்றுமில்லாத தனியான இடத்திலிருந்து. சிறிது உண்டு—அளவுபட மிதமாக வுண்டு. ஒக்க உரை காயம் நெஞ்சு உள்ளொடுக்கி—ஒருங்கே வாக்கு, காயம். மனம் இவற்றின் செயலைஅடக்கி.

எவ்விடத்தும் ஒன்று நசைவிடுதலுற்று—தான் தியானம் பண்ணுகிற தத்துவத்தைத் தவிர மற்றெங்கும் பொருந்துகின்றநசையைவிட்டு வைராக்கியங்கொண்டு.

53. ஆங்காரம்—தேகமே ஆத்மாவென்கிற அபிமானத்தையும், வன்மை—அது வளர்தற்குக் காரணமான வாஸனையின் பலத்தையும், செருக்கு—அதற்கு நிமித்தமானகொழுப்பையும, காமம், வெகுளி, சுற்றம் தேகாது—காமத்தையுங் கோபத்தையும் பிடிப்பையுங் கொள்ளாமல், மமதை நெகிழ்ந்து—தனதல்லாத வெல்லாவற்றிலும் தனதென்கிற எண்ணம்போய்.

54. பிர்ம்மாத்கமான ஆத்மாவைப் பரோக்ஷித்தவன் பிரஸந்நமான நெஞ்சையுடையனாய்க்கொண்டு ஒன்றினிழவுக்குச் சோகியான், ஒன்றை யாசைப்படான். ஸர்வபூதங்களிலும் ஸமனாய் என்பக்கல் பரையான பக்தியைப் பெறுகிறபான் என்க.

55. எவன் நான ஆமவன—ஸவரூபததாலும. ஸவபாவத்தாலும் நான் எவன் என்றும. எவ்வளவினனேவென்—குணத்தாலும் விபூதியாலும் நான் எவ்வளவினனென்றும், பக்தியால் மெய்யுணர்ந்து—பக்தியால் உள்ளபடியறிந்து.

56. கருமங்களெல்லாம்—நித்திய நைமித்திக கர்மங்களையேயன்றி காம்மியங்களான இதர கர்மங்களெல்

லாவற்றையும். ஓவுதல் இலாப் பதத்தை—அழிவில்லா த பதத்தை அதாவது சாசுவதமான பதத்தை. அற்க மற அடையும்—சிறிதுங் குறைவின்றி யடைவான்.

57. நெஞ்சாற் கருமமெல்லாம் நேராக என்னிடை வைத்து—(என்னுடையவனென்றும், என்னாலாளப்படு மவனென்றும் அறிகின்ற) மனத்தைக்கொண்டு ஸகல கர்மங்களையும் (அந்தந்தக் கருமத்தாலாராதிக்கப்படுந் தேவதைகளோடு சேர்ந்து) நேராக என்னிடத்தில் ஸமர்ப்பித்து. பொருவில்—ஒப்பில்லாத.

58. என்னை நினைந்த நீ என்பக்கல் நெஞ்சை யுடைய நீ. துற்கங்கள்—ஸம்ஸாரத்தால் வரும் ஸர்வ கிலேசங்களையும். கடத்தி—தாண்டி விடுவாய். அமர்ந் து—விரும்பி. கேளாயேல்—(நானே கிருத்தியா கிருத் தியங்களெல்லாவற்றையும் அறியவல்லேன் என்கின்ற எண்ணத்தால் நான் சொன்னதை) கேளாயாகில். நசி த்தி—அழிந்துபோவாய்.

59. ஓங்கும் அகங்காரத்தி னுற்றே உயர்சமரம் ஈங்கு முயலேனென்றிருத்தியேல்—(என்னுடைய நன் மை தீமைகளைப்பற்றி எனக்கே அறிந்துகொள்ளும்படி யான ஸாமர்த்தியமுண்டு என்பதாக) மிகுந்த அஹங்கா ரத்தைப் பற்றிக்கொண்டு, 'யுத்தம் செய்யமாட்டேன்'

என்று இங்கு வாளா இருப்பாயாகில். துணிவது மெய்யன்று—உன்னுடைய வ்யவஸாயம் அதாவது நிச்சயம் உண்மையன்றிப் பொய்யாகும். தன்மையது எவுட்—உன்னுடைய ஸ்வபாவந்தானே யுன்னை நியோகிக்கும்.

60. தன்மையமர் தன்கருமந்தன்னுற் பிணிப்புண்டு—உன க்ஷத்திரிய ஜாதிக்கேற்ற சௌரியத்தாற் கட்டுப்பட்டவனுய்க்கொண்டு. அவசனுய்- உன்னையுமறியாமல். செய்வுதி நீ—நீ செய்யப்போகிறுய்.

61. ஈசனவனொருவன் எல்லார் இதையமாமத்தமதில் நிற்கும்—ஸகல பிராணிகளையும் ஆள்பவனே ஸ்வபாவனுன ஸ்ரீவாசுதேவன் (பிரவிருத்தி, நிவிருத்திகளெல்லாவற்றிற்குங் காரணமான ஞானமுண்டாவதற்கு இடமான) ஹிருதயப்பிரதேசத்தில் இருக்கிறுன். மாயையினல்—குணமயமாயிருக்கிற தன் மாயையைக் கொண்டு.

62. ஆனுத—கெடாத. சாயாத- அழியாத. வன்பதம்—பரமபதத்தை.

63. ஞானம்—மோக்ஷார்த்திகளுக்கு வேண்டிய கர்மயோக, ஞானயோக, பக்தியோக விஷயமான

ஞானங்களை. செவ்வாம் மறைப்பொருளை—செவ்வை யான ரஹஸ்யார்த்தங்களை. செப்பினேன்—உபதேசித்தேன். நின் இயல்வால்—உன் அதிகாரத்துக்குத் தக்கபடி.

64. இட்டன்—இஷ்டன். இதமாப் பட்டதனை—இதமாகவுள்ளதை. பரிந்துசொல்வன்—பரிவாகச் சொல்லுவேன்.

65. என்பத்தன் ஆகி—என்னிடத்தில் பிரீதியமானாய்க் கொண்டு. என்னை மனனம் பண்—பிரீதிரூபமாயிருக்கிற ஸ்மிருதி பரம்பரையைச் செய். [வேதநம். தியானம், உபாஸனம் முதலிய சொற்களுக்குப் பொருளாய், தரிசனத்துக்கு ஸமானமாயிருக்கும் மிகுந்த பிரீதிரூபமாயிருக்கும் ஸ்மிருதி பரம்பரை யென்க.] அருச்சி—ஆராதனஞ்செய். ஆராதனமாவது—பரிபூர்ண சேஷவிருத்தி. என்னையே மேவுதி—என்னையே யடைவாய். அறுதி—நிச்சயம்.

66. எல்லா அறங்களையும் அறவிட்டு—கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்கிற மோக்ஷஸாதனங்களான எல்லாத் தர்மங்களையும் என்னுடைய ஆராதன ரூபமாக மிகுந்த பிரீதியோடு உன் அதிகாரத்துக்குத் தக்கபடி செய்துகொண்டே, கீழ்ச்சொன்

படி பலனையும், கர்மத்தையும், கர்த்திருத்வத்தையும் விட்டு. என்னையே சரணமா நண்ணியிடு—ஆராத்ய ஸ்வரூபனான என்னையே பலமாகவும் உபாயமாகவும் கருதிச்சரணம்புகுவாய். நான் பாவங்களினின்றுன்னைப் பற்றுவிடுவிப்பன்—(என்னையடைதற்கு விரோதிகளாய், அநாதி காலமாய் ஸம்பாதிக்கப்பட்டவைகளாய்ச் செய்யத் தகாவற்றைச் செய்கையும், செய்யத்தக்கனவற்றைச் செய்யாமையுமான) ஸகல பாவங்களினின்றும் நான் உன்னைப்பற்றுவிடுவிப்பேன். தாவந்தனை ழி—(ஆகையால்) நீ சோகத்தைவிடு [பக்தியோகத்தையாரம்பிக்கவொட்டாமல் விரோதிக்குமவைகளாய் அநாதிகாலமாய் ஸம்பாதிக்கப்பட்டவைகளாய் நாநாவிதங்களாய் அனந்தங்களாயுள்ள பாபங்களுக்குத்தக்க பிராயச்சித்த ரூபங்களாயும், கிருச்சிரம், சாந்திராயணம், கூச்மாண்டம், வைச்சுவாநரம், வ்ராதபதித்திஷ்டி, த்ரிவ்ருதக்நிஷ்டோமம் தொடங்கிப் பலவிதங்களாயும் அனந்தங்களாயும் எத்தனை காலம் ஜீவித்திருந்து அனுஷ்டித்தாலும் அனுஷ்டிக்கவரியவைகளாயுமிருக்கின்ற ஸர்வதர்மங்களையும் விட்டு, பக்தியோகாரம்பம் ஸித்திப்பதற்காகப் பரமகாருணிகனைப் பிராணிகளிடத்தில் ஒரு விசேஷத்தையும் ஆலோசியாமல் அவைகளுக்கெல்லாம் சரணியனாய் ஆச்ரிதர்களிடத்திலுண்டான வாத்ஸல்யத்துக்குக் கடலாயிருக்கின்ற என்னையே சரணைப்

பற்று. நான் உன்னைக் கீழ்ச்சொன்ன பக்தியோகாரம்பத்திற்கு விரோதிகளான பாபங்களினின்றும விடுவிக்கின்றேம். நீ அதற்காகச் சோகிக்கவேண்டாம் என்று உரைத்தலுமுண்டு.]

67. இப்பொருளை—(இப்போது நான் உனக்குச் சொன்ன பரமரஹஸ்யமான) இந்த அர்த்தத்தை. இல்லாத் தவத்தார்க்கும்—இல்லாத தவத்தையுடையானுக்கும் அதாவது தவம்புரியாதவனுக்கும். என்னைப் பொருதார்க்கும்—என் குணங்களைக் கேட்க ஸகிக்காதவனுக்கும்.

68. மிகவும் ரஹஸ்யமான இவ்வர்த்தத்தை யாவனொருவன் என் பக்தரிடத்தில் பரிவோடு சொல்லுகிறானோ அவன் என்னிடத்தில் மிகுந்த பக்தியைச்செய்து ஸந்தேகமில்லாமல் என்னையடைவான்.

69. அவனின்—அவனைப்போல. மேதினியில்—பூமியில். இனியும் உண்டாகப்போவதில்லை யென்பார் எக்காலுமில்லை யென்றார். [அயோக்கியர்களை முந்தியெடுத்தது, இவ்வர்த்தத்தை யோக்கியர்களுக்குச் சொல்லாமலிருப்பதைப் பார்க்க அவர்களுக்குச்சொல்வது மிகவும் அனிஷ்டமென்கைக்காக வென்க.]

70. நெஞ்சறிவாம் எச்சம்—ஞானயோகம். இறைஞ்சினன்—ஆராதித்தான். எஞ்சலற—குறைவற.

71. சிரத்தையினைச் சேர்ந்து—சிரத்தையோடு கூடி. ஆர்ந்து—விரும்பி. தீர்ந்து துயரற்று—பக்தி விரோதி பாபங்களினின்றும் விடுபட்டுத் துயரமில்லாதவனாய். மகிழும்—ஸந்தோஷிப்பான்.

72. ஒருமைபற்றியாஞ் சித்தத்தால்—ஏகாக்ரசித்தனாய். சீர்க்க—பெருமைபொருந்த. கழிந்ததே—போயிற்றா? இங்கு ஏ, வினாப்பொருளது. சேர்ப்பான்—வினையெச்சம்; சேர்க்கக் காரணமாய் என்பது பொருள்.

73. உன்னுடைய பிரஸாதத்தால் விபரீதஞ்ஞானம் போய் ஞானத்தைப் பொருந்தி மயக்கத்தை யொழித்தேன். சொன்னதெல்லாஞ் செய்வேன் என்க. [தேகாதிகளே ஆத்மாவென்கிற துரபிமானமும், சேதனா சேதன ரூபமான ஸகல பிரபஞ்சமும் பரமபுருஷனுக்குச் சரீரமென்கிற விஷயமுந்தெரியாமல் மாறாக நினைத்திருந்த துரபிமானமும், நித்திய நைமித்திகமான கர்மம் பரமபுருஷனுடைய ஆராதன ரூபமாக அனுஷ்டிக்கப்படுமாகில் அவனை யடைவதற்கு உபாயமாகுமென்கிற விஷயந்தெரியாமல் அதைக்கட்டுக்குடலாக நினைத்திருந்த அஞ்ஞானமுந் தொலைந்தன. ஆத்மா பிரகிருதியின் ஸ்வபாவமின்றி அறிவதே ஸ்வபாவமாய்ப் பரமபுருஷனுக்குச் சேஷப்பட்டு அவனாலாளப்படுவதே ஸ்வரூபமாயிருக்கிறதென்கிறஞானமும், பரம

புருஷனுடைய உண்மையை யறியும்படியான ஞானமும், பரமபுருஷனுக்குப் பிரீதியை வளர்ப்பதான நித்திய நைமித்திக கர்மங்களை யனுஷ்டித்து நிஷித்தங்களை யொழிப்பதாலும், சமம், தமம் முதலிய ஆத்மகுணங்களாலும் பெறவேண்டிய (பக்திரூபமாய்ப் பரிணமித்திருக்கிற) பரமபுருஷோபாஸனத்தால் மாத்திரம் அடையப்படும் பொருளும், வேதாந்த விழுப்பொருளும், பரம புருஷனுமான வாஸுதேவன் தேவரீரே யென்கிற ஞானமும் எனக்கு உண்டாயின என்பதாம்.]

74. இப்படி மகாத்மாவான வாஸுதேவனுக்கும் பார்த்தனுக்கு முண்டான அற்புதமாய் ரோம ஹர்ஷணமான இந்த ஸம்வாதத்தை நான் கேட்டேன் என்க. செவ்வண்ணம் என்றும் பாடம்.

75. யோகத்தை நேரேயருளிச்செய்கிற யோகேசுவரனை கண்ணன் பக்கல் நின்றும் இந்தப் பரமான குஹ்யதமத்தை வியாஸ மகரிஷியினுடைய பிரஸாதத்தாலே கேட்டேன் என்க.

76. ராஜாவே! கேசவார்ஜுனர்களுடைய, புண்யமாய் அத்புதமான இந்த ஸம்வாதத்தை நினைக்க நினைக்க எனக்கு ஸந்தோஷமுள்ளடங்காமல் வருகின்றது என்பதாம்.

77. கிருஷ்ணனுடைய அத்புதமான அந்தரூபத்தை நினைக்க நினைக்க எனக்குப் பெரிய விஸ்மயமுண்டாகாநின்றது. பின்னையும் பின்னையும் பிரீதனாகாநின்றேன் என்க.

78. எங்கே யோகேசுவரனான ஸ்ரீகிருஷ்ணபகவான் எழுந்தருளியிருக்கின்றானோ, அவன் திருவடிகளையே நம்பியிருக்கின்ற வில்லுங்கையுமான அர்ச்சுனன் எங்கே விளங்குகின்றானோ அங்கே தான் லக்ஷ்மியும், விஜயமும், விபூதியும், நீதியும் சாசுவதமாய் நிலைநிற்கும் என்பது என்னுடைய ஸித்தாந்தம்.